Regd. No. 2975

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

Editor :—P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 287

ஆசிரியர் : P. B. அண்ணங்கராசாரியர்

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 58.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

15—9—1972ல் வெளியிடப்பட்டது.

# நியாயஸித்தாஞ்ஜன ச!ர்ச்சையின் பெருக்கம்

ஸ்ரீ ராமாநுஜனின் சென்றவிதழில் "திருமலையில் நியாய ஸித்தாஞ்ஜன
சர்ச்சை" என்ற தலைப்பில் வெளிவந்த வியாஸத்தைப் பலரும் படித்திருப்பார்கள்.
சென்ற ஆனிமாதத்தில் திருமலையில் பன்னிரண்டுநாள் நடைபெற்ற ஸ்ரீ லக்ஷ்மீ
நாராயண மஹாக்ரது ஸந்தர்ப்பத்தில் அங்கு க்ரந்த பாராயணத்திற்காக
வந்திருந்த வித்வான்களில் நமக்கு மிகவும் பரிசிதரும் சிறந்த பண்டிதருமான ஒரு
ஸ்வாமிக்கும் நமக்கும் நியாய ஸித்தாஞ்ஜனத்தில் நடந்த சர்ச்சை அந்த வியாஸத்
தில் விவரிக்கப்பட்டுள்ளது. அந்த க்ரந்தத்தில் நாம் கேட்ட நான்கு கேள்விகளும்
அவற்றுக்கு அந்த ஸ்வாமி ஆர்ஜவத்துடன் அளித்த விடைகளும் அந்தக் கட்டுரை
யில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. கோயிலில் வாழும் ஸ்ரீமதுபயவே. வித்வான்.
மதுராந்தகம் வீரராகவாசாரிய ஸ்வாமி அந்த நியாய ஸித்தாஞ்ஜனக் கேள்விகள்
நான்குக்கும் தாம் விடை யளிப்பதாக எழுந்து "ந்யாய ஸித்தாஞ்ஜந ப்ரச்நோத்த
ராணி" என மகுடம்பூண்ட வொரு பத்ரிகையை ஸம்ஸ்க்ருத பாஷையில் எழுதி
நமக்கனுப்பினுர். உடனே அடியேன் அந்த ஸ்வாமிக்கு விஜ்ஞாபனமெழுதிக்
கொண்டதாவது, இந்த வியாஸத்தை தேவரீர் ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையிலோ
ஸ்ரீரங்கநாத பாதுகா பத்ரிகையிலோ தனிப்புத்தகமாகவோ வெளியிட்டருளினுல்
விஷயங்களை உலகமெல்லாம் தெரிந்துகொள்ள இயலும்; ஏகாந்தமாக அ[illegible]யேனுக்
கெழுதி யனுப்புவதனுல் என்னுதும்?...இத்யாதி.

அதற்கு ஒருவாரம் எதிர்பார்த்தும் பதில் ஸ்ரீமுகம் கிடைக்காததனுல், நான்கு
கேள்விகளுக்கும் அந்த (மதுராந்தகம்) ஸ்வாமி எழுதியனுப்பிய உத்தரங்களை அநுவ
தித்து அவற்றின் பொருத்தமின்மையை விளக்கி நமது வைதிக மநோஹரா
என்னும் ஸம்ஸ்க்ருத மாஸிக பத்ரிகையில் (193ல்) வெளியிட்டுள்ளோம். அது
ஸம்ஸ்க்ருத பண்டிதர்களுக்கு மட்டுமே பயன்படுமாதலால் தமிழறிஞர்களுக்கும்
விஷயங்கள் விளங்குமாறு இதில் எழுத நினைத்தோம். அந்த விஷயங்கள் ஸம்ஸ்
க்ருத பண்டிதர்களுக்கே புரியக்கூடியவை யாதலால் தமிழில் மொழிபெயர்ப்பதை
நிறுத்திக்கொண்டோம். அந்த ஸம்ஸ்க்ருத பத்ரிகையை நமக்குப் பரிசிதர்களான
தென்னுட்டுப் பண்டிதர்களுக்குங்கூட கிடைக்கச் செய்துவருகிறோமாதலால் அது
கொண்டே அவரவர்கள் தெரிந்துகொள்க. அது கிடைக்கப்பெருதவர்கள் நமக்கு
எழுதிப் பெறலாம்.

முக்கியமான ஒரு விஷயம் மட்டும் அதிலிருந்து இங்குக் காட்டுகிறேன்.
நியாயஸித்தாஞ்ஜன ஜீவபரிச்சேதத் தொடக்கத்தில் ஜீவ லக்ஷணமருளிச் செய்யா
நின்ற தேசிகன் இருவகையான லக்ஷண மருளிச்செய்தார். இரண்டும் பிராட்டி
யிடத்திலும் ஸமந்விதமாகக்கூடியது. முந்தின லக்ஷண வாக்யத்தில் "அல்ப பரிமா
ணத்வே ஸதி" என்றிருக்கிறது. லக்ஷ்மீ விஷயத்தில் அது ஸவிவாதமென்று அதை
விட்டிட்டு (சேஷத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வம்) என்கிற இரண்டாவது லக்ஷணம்
நிர்விவாதமாதலால் அதில் அதிவ்யாப்தியை சங்கித்தார் வ்யாக்யாதாவான ரங்க
ராமாநுஜஸ்வாமி. அதற்கு எவ்விதமாகப் பரிஹாரம் செய்தாரென்னில், "ஈச்வர
தாபர்யாப்த்யகரணுபேக்ஷயா சேஷத்வம் விவக்ஷிதமாகையாலே பிராட்டி யிடத்தில்
அதிவ்யாப்தியில்லை யென்றுர். இதில் தமக்கே அஸாமஞ்ஜஸ்யம் தோன்றிற்று.

(இதன் தொடர்ச்சி ரேப்பர் 3-ம் பக்கம் பார்க்கவும்)

# ஸ்ரீ ராமாநுஜன் —287



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும்
வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 24 | பரிதாவிஷு ஆவணிமீ 15—9—72ல் வெளியிடப்பட்டது | ஸஞ்சிகை 11

## நிகழ்ந்துவரும் வாதவிவாதங்கள் எப்போது தொடங்கியவை? எதனுல் தொடங்கியவை? எப்போது முடிபவை?

மேலேகண்ட மூன்று கேள்விகள் நம்மை நோக்கிப் பலரால் கேட்கப்படுகின்றன. கடிதம் மூலமாகக் கேட்பவர்களும் நேரில் கேட்பவர்களுமாகப் பலர் தேறுகிருர்கள். இங்ஙனே கேட்கவேணுமென்கிற கருத்துடையார் மற்றும் பலர் இருக்கக்கூடும். நமது ஸ்ரீராமாநுஜன் மூலமாக ஸம்ப்ரதாயார்த்த விவாதங்களைப் பற்றிய கட்டுரைகள் ஸமய விசேஷங்களில் வெளிவந்துகொண்டிருக்கின்றனவென்பது யாவருமறிந்ததே. (யதார்த்த ராமாநுஜனெண்பத்திரண்டு) (தேசிக பக்த ரத்ன கிரீடம்) என்னுங் கட்டுரைகள் ஸமீபத்தில் வெளிவந்தவை. முன்னே வெளிவந்தவையுமுண்டு. இவை ஸமூலங்களேயன்றி நிர்மூலங்களல்ல. மூலமறியாதவர்களே இங்ஙனம் கேட்கலாகிறது. மூலமறிந்தவர்களும் பலர் மறந்திருக்கக்கூடும். அறியாதவர்களுக்கும் அறிந்துமறந்தவர்களுக்கு முணர்த்தப்படுகிறதிங்கிப்போது. அடுத்த கட்டுரையை அமைதியுடன் வாசிக்க. வேறு விஷயங்களில் கண் செலுத்தாமல் இதையே அனைவரும் வாசிக்கவேண்டுமென்றே இவ்விஷய மொன்றேடுமட்டும் இவ்விதழை முடிக்கிறேன். ... ... ... ... *

---

சிறுகுறிப்பு:— ஸ்ரீ லோகாசார்ய ஸித்தாந்த ஸாரம் என்னும் பெயரால் வெளிவந்து கொண்டிருக்கும் நூல் பூர்த்தியாக அச்சாகி முடிந்து விட்டது. அடுத்த இதழில் வெளிவரும். அது சந்தா செலுத்தியவர்களுக்குமட்டுமே அனுப்பப்படும்.

— அனைவருங்காணவேண்டிய அடியேன் விண்ணப்பம் —

# ஸ்ரீமத் ஆண்டவனும் - அடியேனும்

ஒவ்வொருவரும் தம்தமது வாழ்நாளில் சிலரையோ பலரையோ ஸ்நேஹிதர்களாகக் கொள்வது உலக வியல்பு. ஒருவற்கு ஸ்நேஹிதர்களாகப் பலர் இருந்தாலும் அந்தரங்க ஸ்நேஹிதராக—அத்யந்தம் ஆப்தராக ஒருவரிருவரே கொள்ளப்படுவர். இது அவரவர்களுடைய ஸ்வாநுபவத்திற்கு இலக்கான விஷயம். இந்த வகையில் அடியேனை நோக்கிச் சிலர் "அண்ணா! உனக்கு அந்தரங்க ஸ்நேஹிதர் யார்?" என்று கேட்டால் இளமையில் கல்விகற்கும் காலத்தில் ஸஹபாடிகளாயிருந்தவர்களில் சிலரை இப்போது ப்ரஸ்தாவிப்பதற்கு இடமில்லாதபடி என்னுடைய தௌர்ப்பாக்யவசத்தினால் அவர்கள் மறைந்துபோயினர். *தே ஹி நோ திவஸா கதா:* என்று வருந்தவேண்டும்படியான அக்காலத்தை மறந்துவிடுவோம். முப்பத்திரண்டாவது பிராயத்தில் அஸ்மதாசார்யபாத ஜகத்குரு ஸ்வாமியின் நியமனத்தினால் மஞ்ஜுபாஷிணீ பத்ரிகா ஸம்பாதநம் தொடங்கிய காலத்தில் பூனா ஸமீபத்தில் ஸம்ஸ்க்ருத சந்த்ரிகா பத்ரிகா ஸம்பாதகரா யிருந்த அப்பா சர்ம வித்யா வாசஸ்பதி யென்பவரும், கேரளதேசத்தில் விஜ்ஞான சிந்தாமணி பத்ராதிபராயிருந்த புன்னச்சேரி நீலகண்ட சர்மா என்பவரும் வெகு தூரதேசஸ்தர்களாயிருந்தும் பரம ஸுஹ்ருந்மணிகளாயிருந்து, அவர்களைத் தேடி நான் அங்கே செல்வதும், என்னைத்தேடி அவர்கள் இங்கே வருவதுமாயிருந்த காலத்தையும் விட்டிடுகிறேன். இற்றைக்கு நாற்பத்தைந்து வருடங்களுக்கு முன்னால் (அதாவது) என்னுடைய முப்பத்தைந்து பிராயத்திற்குமேல் ஏற்பட்ட பலபல ஆப்த ஸுஹ்ருந்மணிகளுக்குள் இற்றைக்கும் வாழ்பவர்களான இருவரை மிக முக்கியர்களாகக் குறிப்பிடுகிறேன். திருவிண்ணகர் (உப்பிலியப்பன் ஸன்னிதி) நவநீதம் ஸ்ரீராம தேசிகன்; திருக்குடந்தை கண்ணன் ஸ்வாமி-என்னு மிவ்விருவரையே இயம்புவேன். முன்னம் குறிப்பிட்ட ஸ்ரீராமதேசிகன் இற்றைக்கும் எனக்கு ஏ க வ ச ன வ்யவஹார்யன். அடுத்தபடி குறிப்பிட்ட கண்ணன் ஸ்வாமி தற்காலம் ஸ்ரீமத் ஆண்டவன் பதாபிஷிக்தராகையாலே முன்னிருந்த ஏகவசன வ்யவஹார்யத்வத்தை இப்போது நினைப்பதும் எழுதுவதும் அபசாரமாகும். திருவிண்ணகரில் எழுந்தருளியிருந்த நவநீதம் க்ருஷ்ணமாசார்ய மஹாஸ்வாமி திருக்குடந்தை கண்ணன் ஸ்வாமி (ஆண்டவன்) திருவவதரிப்பதற்கு முன்னே பிடித்து எனக்குப் பரமஸ்நிக்தராகையாலும்; அந்த ஸ்நேஹவிசேஷம் அவருடைய மூத்த குமாரனான ஸ்ரீராமதேசிகனளவிலும் இளமை தொடங்கியே ஏறிப்பாய்ந்தபடியாலும் இங்குற்ற ப்ரஸ்தாவத்தில் அவனை முந்துற முன்னம் நிர்தேசித்தேன். அஸ்மதாசார்யரான ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமி கஜதுரகாதி பரிவாரங்களுடனே தென்னாட்டுத் திருப்பதி யாத்திரை செய்தருளினபோது அடியேனுங்கூட விருந்தேன். ஒரு நாள் திருவையாற்றில் தங்க நேர்ந்தது. அப்போது நம் ஸ்ரீராமதேசிகன் அவ்விடத்துக் கலாசாலையில் சிரோமணி வகுப்பில் வாசித்து வருகிறான். இவனை காதிஸ்வாமி ஸன்னிதிக்கு அழைத்துவந்து ஏதாவது சொல்லு என்றேன். சொல்லமுத மழைபொழிந்தான். பம்பைக்கரையில் திருவடியின்பேச்சைக் கேட்ட பெருமான் "ஆர்கொலிச் சொல்லின் செல்வன்? வில்லார்

தோளிளையவீர ! விரிஞ்சனே விடைவலானே !" என்று வியந்ததுக்கும் மேலாக வியந்தார் காதிஸ்வாமி. ஸம்பாவித்தனுப்பிய பிறகு என்னைக் கேட்டருளினர்—'இந்தப்பிள்ளை உன்னோடு மிக நெருங்கிப் பழகினவன்போல் தெரிகிறதே, அப்படி ஏதேனுமுண்டோ ?' என்று. ஸ்வாமி அப்போது பத்து வருடங்கள் அடர வட நாட்டிலேயே ஸஞ்சாரமாக எழுந்தருளியிருந்தபடியால் இந்த ப்ராந்தச் செய்திகளில் ஒன்றையும் அறியாதிருக்க நேர்ந்துவிட்டது. அப்போது பலவும் விஜ்ஞாபித்தேன். நிகழ்ச்சி 1922ல் என்று நினைவு. இற்றைக்கு ஏறக்குறைய ஐம்பது வருஷமாகிறது. இதை இப்போது எதற்காக எழுதுகிறேனென்பது மேலே தெரியவரும்.

பிறகு சிலபல வாண்டுகள் கடந்த பின்பு திருக்குடந்தை கண்ணன் ஸ்வாமியோடு நட்பு விளைந்தது. அசோகவனத்தில் திருவடியைக்கண்ட பிராட்டி "வாநராணாம் நராணாஞ் ச கதமாஸீத் ஸமாகம:?' என்று கேட்டாள். ஸமாகம: கதமாஸீத் ? என்று கேட்டது பொருத்தமற்றதென்று கருதிய திருவடி "ராம ஸுக்ரீவயோரைக்யம் தேவ்யேவம் ஸமஜாயத" என்றார். நேர்ந்தது ஸமாகமமன்று, ஐக்யம் என்னவேணும் என்பது திருவடியின் கருத்து. அதை ஔபசாரிக மென்னலாம். ஐக்யமென்பதற்கு இங்குத்தான் முக்ய வ்ருத்தி. எங்கு? கண்ணன் ஸ்வாமிக்கும் எனக்குமான விங்கு. ஆண்டவனுக்கும் அண்ணாவுக்குமென்று கொள்க.

அநர்க்கராகவத்தில் முராரி கவி "யதிந்தோரந்வேதி வ்யஸந முதயம் வாநிதிரபாம், உபாதிஸ் தத்ராயம் ஜயதி ஜநிகர்த்து: ப்ரக்ருதிதா, அயம் கஸ் ஸம்பந்தோ யதநுஹரதே தஸ்ய குமுதம்" என்றார். மாலதீமாதவீயத்தில் பவபூதி கவி "வ்யதிஷஜ்தி பதார்த்தாந் ஆந்தர: கோபி ஹேது: ந கலு பஹிருபாதீந் ப்ரீதயஸ் ஸம்ச்ரயந்தே, விகஸதி ஹி பதங்கஸ்யோதயே புண்டரீகம் த்ரவதி ச ஹிமரச்மாவுத்கதே சந்த்ரகாந்த:" என்றார். சாகுந்தலத்தில் காளிதாஸர் "கஸ்யசித் க்வசிதேவ தாராமைத்ரீ" என்றார். அடிகாணமாட்டாத அன்பின்படிகளை யுணர்த்தியவாறு. இருவோமுக்கும் எப்போது நேசம் அங்குரித்தது, அது என்றைக்குப் பல்லவிதமாயிற்று, என்றைக்குக் கோரகிதமாயிற்று, என்றைக்குப் புஷ்பிதமாயிற்று......என்பதொன்று மறிகின்றிலேன்.

ஒருநாள் ராஜமன்னார் ஸன்னிதியிலிருந்து கும்பகோணம் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்து திருச்சித்ரகூடம்போக டிக்கெட்டு வாங்கிக்கொண்டு வண்டியேறினேன். நான் ஏறின பெட்டியில் கண்ணன் ஸ்வாமி வீற்றிருக்கிறார். அவர் நியாய பாடம் வாசிக்கத் தேவனார்விளாகம் செல்லப் புறப்பட்டவர். அடுத்த ஸ்டேஷனாகிய திருநாகேச்வரத்தில் இறங்கவேண்டியவர். மூன்றாவது நிமிஷத்தில் அந்த ஸ்டேஷன் வந்துவிட்டது. வண்டியைவிட்டு இருவருமிறங்கினோம். ஒரு மரத்தடியில் உட்கார்ந்தோம். பேசத் தொடங்கினோம். என்ன பேசினோம்? "கிமபிகிமபி மந்தம் மந்தமாஸத்தியோகாத் அவிரலிதகபோலம் ஜல்பதோரக்ரமேண...... அவிதிதகதயாமா ராத்ரிரேவ வ்யரம்ஸீத்." கண்ணன் தேவனார்விளாகத்தை மறந்தார். அதை மட்டுமன்று, திருக்குடந்தையையும் மறந்தார், அண்ணா தில்லைத் திருச்சித்திர கூடத்தை மறந்தான். அதை மட்டுமன்று, திருக்கச்சியையும் மறந்தான். ஒரு

ஸமயம் பெருமாள் பிராட்டியை நோக்கிக் கேட்கிறார்—*வைதேஹி ரமஸே கச்சித் சித்ரகூடே மயா ஸஹ?* என்று. அந்தோ! ஈதென்ன கேள்வி? [*ஆருக்கென் சொல்லுகேன்?*] சங்கிடு குட்டைகளுக்குச் சொல்லவோ? என்கிறார் நம்பிள்ளை. அந்த இடத்தைவிட்டு என்றைக்குப் பெயர்ந்தோம்! எங்கே சென்றோம்......ஒன்றுந் தெரியாது. எனக்கு மட்டுமன்று, அவரைக் கேட்டாலும் தெரியாதென்பரத்தனை. அவரை நோக்கியே நான் எத்தனை தடவை திருக்குடந்தை சென்றிருப்பேன். என்னை நோக்கியே அவர் எத்தனை தடவை கச்சிப்பதி வந்திருப்பர். ஜார்ஜ் டவுன் எங்கே? பரோடா ஸ்ட்ரீட் எங்கே? மஹாபாரதத்திற்கும் மேலாகவன்றோ எழுத வேண்டும்.

*விதிவாய்க்கின்று காப்பாரார் என்ற கணக்கிலே ஆச்ரமஸ்வீகாரம் வந்து புகுந்தது. ஸு 1964 என்று ஞாபகம். காஞ்சியில் எழுந்தருளியிருக்கிறபடி. பண்டிதர்களைத் திரட்டி யநுபவிக்கும் ஸந்தர்ப்பத்திலே திருவடிதொழச் செல்லும் பாக்கியம் பெற்றேன். *பலரடியார் முன்பருளிய* என்னுந் திருவாய்மொழிப் பாசுரக்ரமத்திலே இரண்டு வார்த்தைகள் அருளிச்செய்யலாயிற்று. ரஹஸ்யமாகவன்று, ஸதஸ்யமாக. (1) நவநீதம் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியும் நானுமே அண்ணு வாயில் அகப்பட்டுக் கொள்ளாதவர்கள். (2) [அங்கு உபஸ்திதர்களாயிருந்த பண்டிதர்களை நோக்கி] "அண்ணு வொருவரிடத்தே நீங்களெல்லீரும் சிக்கிக் கொண்டவர்கள்தானே".

அதே ஸந்தர்ப்பத்தில் என்னுடைய பங்குனி விசாக நிகழ்ச்சி நடைபெறுகிறது. பத்து நாட்களில் ஏதேனுமொருநாள் அருளிச்செயல் கோஷ்டியை அலங்கரித்தருளலாகுமோ? என்று ஸ்ரீகார்யதுரந்தரரிடத்தில் ஸ்வல்பம் ப்ரஸ்தாவித்தவத்தனை. அன்றிரவே *அதந்த்ரித சமூபதிப்ரஹிதஹஸ்தம் அஸ்விக்ருத ப்ரணீத மணிபாதுகம்போலே 'பஹுநிஷேதவாக்திக்க்ருதி' யுமாகி எழுந்தருளிய நுக்ரஹித்தது "தவஞ்செய்தார் வெள்கிநிற்ப, விண்ணுளார் வியப்ப"வுக்கும் மேலாயிருந்தபடியை யாரே மறப்பார்! அப்போது ஏதேனும் ஸ்ரீஸூக்தியருளிச்செய்ய வேணுமென்று வேண்ட, "இந்த க்ருஹத்தில் எத்தனைநாள் உண்டிருப்பேன்! எத்தனை காலமுறங்கியிருப்பேன்!" என்று தொடங்கி யருளிச் செய்தவற்றுக்கு "அஸ்மிந் மயா ஸார்த்த முதாரசிலா சிலாதலே......த்வாமாஹ ஸீதா பஹு வாக்யஜாதம்" என்றதற்கும் மேலாக ஒரு ஸ்ரீராமாயணமவதரிக்கவேணும். "பன்னியுரைக்குங்கால் பாரதமாமென்று நிற்கிறேன்.

ஆளவந்தார் ஸ்தோத்ரரத்ன ஸமாப்தியில் ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு ஒரு விசேஷணமிடுகிறார் "அக்ருத்ரிம ப்ரேமப்ரகர்ஷாவதிம்" என்று. அத்தகைய விசேஷணத்திற்கு மேற்படவும் ஒரு விசேஷணம் ஸம்பவிக்குமாகில் அவ்விசேஷணம் கீழே ப்ரஸ்தாவித்த இருவர்க்கும் ஏற்கும் என்னத் தட்டில்லை. எனது நெஞ்சினால் அவர்களுக்கு ஏற்பதுபோல, அவர்களது நெஞ்சினால் எனக்குமேற்கும். இஃது என்றைக்கோ என்லவேண்டா; இன்றைக்கும் நாளைக்கும், என்றைக்கும்.

இதற்குமேலே அவதாரிகையாகச் சில வரிகள் எழுதவேண்டியிருந்தாலும் அவதாரிகையைவிட்டு விஷயத்தையே எழுதுகிறேன். (வர்த்தமான) ஸ்ரீமதாண்டவன்

ஆஸ்தானத்தை அலங்கரித்தவுடனே, ஏற்கனவே நெடுநாளாக நடந்துவந்து இடையில் நின்றுபோயிருந்த ஸ்ரீரங்கநாத பாதுகாபத்ரிகையைப் புநருத்தாரம் செய்தருளலாயிற்று. அதில் தென்கலை யாசாரியர்கள் கலிபுருஷனுடைய அவதார பூதர்களென்று விவரிக்கும் கட்டுரை யொன்று வெளிவந்தது. இதை ஆண்டவன் எழுதி வெளியிட்டாரென்றாவது ஒருவரைத் தூண்டி எழுதுவித்து வெளியிடுவித்தாரென்றாவது நாம் கனவிலும் நெஞ்சாலும் நினைக்ககில்லோம். விஷயம் வெளிவந்துவிட்டது அபலபிக்க முடியாதது. ஸஞ்சிகை சித்தமானவுடனே இக்கட்டுரையை ஆண்டவன் கடாக்ஷியாம லிருந்திருக்க முடியாது. "அப்ரதிஷித்தம் அநுமதம் பவதி" என்கிற நியாயத்தை யறியாதாருளரோ? கண்ணுடியறையில் நின்றுகொண்டு வழிப்போக்கர்மீது கல்லெடுத்தெறிகிறவன் படுகிற பாடுகள் பட்டாயிற்று அக் கலிபுருஷக் கட்டுரைகாரர்.

ஆண்டவனுக்கு ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் ப்ராப்தமாயிற்று. அதற்காக மலரென்று ஒரு பெரிய புத்தகம் வெளியிடலாயிற்று. அதில் — "இத்தால் வேதங்களுக்குப் போல் பிரபந்தத்திற்கு ப்ராமாண்யம் வந்துவிடாது" என்று அபர தேசிக பிருதவாஹகர் அழுத்தம் திருத்தமாக எழுதிக்கொடுத்த கட்டுரை வெளியிடப்பட்டது. "விந்த்யஸ்தம்பாத்...நித்யம் ஜாதா சடரிபுதநோர் நிஷ்பதந்தீ முகாத்தே ப்ராசீநாநாம் ச்ருதிபரிஷதாம் பாதுகே! பூர்வகண்யா" "த்ரமிடோபநிஷந்நிவேச சூந்யாநபி லக்ஷ்மீரமணய ரோசயிஷ்யந்" "ச்ருதீநாம் விச்ரமாயாலம் சடாரிம் த முபாஸ்மஹே" இத்யாதி தேசிக திவ்யஸூக்திகளையே நித்யாநுஸந்தானத்தில் கொண்டிருக்கிற ஸ்ரீமத் ஆண்டவன் தாமும் கண்டு ஸஹித்திருக்கமுடியாத இக்கட்டுரையை அடியேன் கண்டு ஸஹித்திருக்கப்போமோ? அஸம்பத்தலேகனங்கள் இருவகைப்படும். அப்ராமாணிகார்த்தங்களை யெழுதுவது ஒருவகை. இன்னது எழுதிற்றென்று புரிந்துகொள்ள முடியாதபடி அக்கிலி பிக்கிலித்தனமாக எழுதிவைப்பது மற்றொரு வகை. இவ்வகைகளிலே வெளிவரும் கட்டுரைகளைக்கண்டு சித்த விகாரம் கொள்ளாமலிருக்கும்படி எம்பெருமான் என்னைப் படைக்கவில்லை.

சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் பதவியில் வாழ்ந்து, இப்போது டில்லியில் உயர் பதவியில் வாழ்பவரான உயர்திரு அழகிரிசாமி யவர்கள் எனது நூல்களைப் பெரும்பாலும் படித்தவர் தமது கட்டுரை யொன்றில் "நமது P. B. A. சுவாமிகள் யார் தவருக எது எழுதினாலும் நிர்தாக்ஷிண்யமாகக் கண்டிக்க ஒருபோதும் பின்வாங்க மாட்டார்" என்றெழுதி யிருப்பதும் பல சபைகளில் பேசியிருப்பதும் ப்ரஸித்தம். கீர்த்திமூர்த்திகளான, ஸர். S. வரதாசார்ய ஸ்வாமி, S. R. S. ராகவன் முதலானோரும் எழுதியுள்ளார். ஸ்ரீமத் பரமஹம்ஸ தென்பரையாண்டவன் அருளிய திருமுகம் அனைத்துக்கும் சிகரமானது. ஸமயத்தில் தெரிவித்தாகவேண்டிய விஷயங்களை உள்ளபடி தெரிவிப்பது உரியதேயாகும்.

முந்துற முன்னம் ப்ரஸ்தாவித்த (உப்பிலியப்பன் ஸன்னிதி) நவநீத நண்பனைப்பற்றி இனி விரிவாக வரையவேண்டியதாகிறது. கீழே ப்ரஸ்தாவித்த விஷயங்கள் நாலைந்து ஐந்தாறு ஆறேழு வருடங்களுக் குட்பட்டவை. இப்போது வரையப்

2

போகிற நவநீத நண்பர் விஷயம் 1944ஆம் ஆண்டிலிருந்து தொடர்ந்து வருமது. ஏறக்குறைய முப்பது வருஷகாலமாகத் தொடர்ந்து வருமது. [ஏகவசன வ்யவஹா ரார்ஹனென்று ஸௌஹார்தபூம்நா கீழே யெழுதியிருந்தாலும் *தே ஹி நோ திவஸா கதா:* என்றிருக்குமிப்போது பஹுவசன வ்யவஹாரமே உரியது.]

இவர் 1944ல் தேசிகப் பிரபந்தவுரை யொன்று வெகு சிரமப்பட்டு வெளி யிட்டார். அதில் முகப்பில் தேசிக சரித்திரமென்று ஒன்று சேர்க்கப்பட்டுள்ளது. அது இந்த நண்பரால் எழுதப்பட்டதன்று. சென்னை அட்வகேட் ஸ்ரீ உ. வே. D. ராமஸ்வாமி ஐயங்காரென்பவரால் எழுதப்பட்டது. இவரும் நமக்குப் பரம ஸுஹ்ருந்மணியே. [முன்னம் சில வார்த்தைகள்.] தன் தாயையோ மனைவியையோ யாரும் எவ்வளவும் புகழலாம்; இவள் நிகரற்ற பதிவ்ரதை, ஒத்தாரும் மிக்காரு மில்லாத ஸாத்வி—என்று எவ்வளவும் உயர்த்திப் பேசலாம். 'அவள் ஸ்வைரிணி, உவள் ஸ்வச்சந்தசாரிணி' என்று பிறமாதரை யிழுத்து இழுத்துப் பேசுவது அபாயங் களுக்கு இடமானதென்பதை இந்த அட்வகேட் அறியமாட்டாதவரல்லர்.

வராஹ புராணத்திற்கு உள்ளீடான கைசிகத்தை வியாக்கியானிக்கப் புகுந்த பட்டர் வராஹாவதாரத்திற்கு ஏற்றமுறைக்கவேண்டி மற்றை யவதாரங்களுக் கெல்லாம் தாழ்வை விளக்குகிறார். அது ரஸிகர்களுக்குப் பரமபோக்யமான பத்ததி. பெரிய வாச்சான்பிள்ளை திவ்யப்பிரபந்த வியாக்கியானங்களில் ஒராழ்வார்க்கு ஏற்ற முறைக்கவேண்டிய பிரகரணத்தில் மற்றையாழ்வார்களுக்குச் சிலகுறைகள் காட்டுவ துண்டு; அதுவும் *நஹிநிந்தா நியாயத்தின்படி ஸஹ்ருதயஹ்ருதயங்கமமே யாகும். இந்த அட்வகேட் இதர ஆசார்யர்களை தூஷிப்பதையே முக்கிய லக்ஷ்யமாகக் கொண்டு தேசிக சரித்திர மெழுதப் புகுந்தார். இதிலுள்ள அஸம்பத்தங்களை நமது நவநீத நண்பர் காணாமலே அச்சடித்துத் தமது உரைப் புத்தகத்தில் சேர்த்துவிட் டார். உரை பாரங்களை யெல்லாம் எனக்கு தவறாது ப்ரூப் (proof) அனுப்பிவந்த நண்பர் இந்தச் சரித்திரப் பகுதியை மட்டும் அனுப்பிற்றிலர். (பிறகு அநுதாபம் காட்டியிருக்கிறாரென்பதை மேலே விளக்குவோம்.)

அக்காலத்தில் நாம் ஸ்ரீ ராமாநுஜன் ஆரம்பிக்கவில்லை. அம்ருதலஹரி யென்னும் பத்ரிகையை நடத்திவருகிற காலமது. அந்தப் பத்ரிகையில் அட்வகேட் டின் அபபாஷிதங்களை யெல்லாம் அலசியலசி யுதறித்தள்ளி யிருக்கிறேன். அவர் தத்துவ முணர்ந்துகொண்டவராகையால் பிறகு வாயைக் கையைத் திறந்திலர். ஆனால் கண்டிக்கப்பட்டொழிந்த அந்த சரித்திரத்தை மட்டும் மறு பதிப்புகள் செய்துகொண்டிருந்தார். நமது அம்ருதலஹரியில் வெளிவந்த தேசிகப் பிரபந்த வுரை யாராய்ச்சி யென்னும் விபுலமான கட்டுரையில் கண்ட மறுப்புகள் நவீனர் பலர்க்கு அஸஹ்யமா யிருந்தபடியால் மூலைக்கொருவராகக் கிளம்பி நிந்தைக்கந்தை களை வெளியிட்டு வந்தார்கள். நமது கண்ணில் படாமலே பல மறைந்துலாவின. கண்ணில் பட்டவை மாய்ந்தொழிந்தன. மாய்ந்துகொண்டு மிருக்கின்றன.

அந்த ஸமயத்தில் நமக்கு ஷஷ்டியப்தபூர்த்தி அணுகிற்று. ஆப்தர்களான பல பெரியார் பலர் கூடி ஒரு கமிட்டி ஏற்பாடுசெய்து, அப்போது சென்னை ஹை கோர்ட் ஜட்ஜ் பதவியை வஹித்திருந்த உயர் திரு. W. கிருஷ்ணஸாமி நாயுடு அவர் களை அதற்குத் தலைவராக்கினர். அப்பெரியார் முன்னின்று வெளியிடத் தொடங் கின ஷஷ்டியப்தபூர்த்தி மலரில் பிரசுரிக்கப் பல பெரியார்களிடம் கட்டுரைகள்

கேட்டு வாங்கினர். இந்த அட்வகேட் ஸ்வாமியையும் கேட்டிருந்தார் போலும். இவருடைய ஆங்கிலக் கட்டுரை யொன்று (மொழிபெயர்ப்புடன்) அம்மலரில் வெளி வந்துள்ளது. அதிற் தாமே இந்த கனேபரங்களை யெல்லாம் தமது கையால் பொறித்துவைத்திருக்கிறர்; அதிலுள்ள சில வாக்கியங்கள்—

"Controversy had always a fascination and grip over the mind of the Swami and for that reason a lot of not very pleasant literature has come into being both by and in respect of the Swami. As can be expected, the Swami's powerful personality has been the target for hostile and adverse criticism from several quarters. It must be said to his credit that he never felt vanquished in any verbal warfare and would always have the last word on any subject,—there have been several such — in a very telling manner."

இவ்வட்வகேட் ஸ்வாமி முன்னம் ப்ரஸ்தாவித்த நவநீத நண்பர் பதிப்பான தேசிகப்பிரபந்தவுரை நூலில் சேர்த்திருக்கிற தேசிக சரித்திரத்திலுள்ள அபபாஷி தங்களையும் அவற்றுக்கு நம்முடைய பதிலுரைகளையும் முப்பது வருடங்களுக்கு முன்பு பலர் கண்டார்களெனினும் இக்காலத்தவர்கள் காணவேண்டியது மிக அவசியமென்று கருதி அவற்றில் சில பகுதிகளை மட்டும் ஈண்டு உபஹரிக்கின்றேன்.

மஹோபகாரகர்களான ஆசாரியர்களின் பெருமையை நன்கு விளக்குவது நன்றியறிவுடைய நல்லன்பர்களின் கடமையே. உபகாரகர்களில் தலைவரான தேசிக ஸார்வபௌமரது பெருமையை எவ்வளவு பகர்ந்தாலும் எத்தனை பக்கங் களெழுதி வெளியிட்டாலும் போராது. அங்ஙனம் எழுதப்படும் பெருமையானது இதர ஆசார்ய தூஷணைக் குற்றம் கலசாமலும் பிராமாணிக வழியைக் கடவாமலு மிருத்தல் வேண்டும்.

600 வருஷங்களுக்கு முன்பு வாழ்ந்த மஹானுடைய சரித்திரம் நமக்குப் பரோக்ஷமாதலால் பிராமாணிகமானவொரு முன்னூலைத் தழுவி யெழுதியாக வேண்டுமேயல்லது நம்மனத்தில் தோன்றியவாறு எதையேனுமெழுதி விடுவது விவேகிகளின் பணியன்று. முன்னோர்கள் எழுதாத கதைகளைத் தொடுப்பதும், அவர்கள் எழுதியுள்ளதற்கு மாறுபாடாக வ்ரைவதும் சில பாமரர்களை மயக்குமே யல்லது விவேகிகளை உகப்பிக்கமாட்டாது. இதர ஆசாரியர்களைத் தூஷிப்பதற்கு ஒரு வியாஜமாக தேசிக சரித்திரம் எழுதுகிறோமென்று முன் வருவது உண்மையில் தேசிகரை லாகவப்படுத்தியதாகுமே யொழிய இறையும் பெருமைப் படுத்தியதாகாது.

இக்காலத்தில் லௌகிகமறியாத வெறும் வைதிகர்கள் எழுதும் நூல்களை எப்படி யெழுதினாலும் ஆங்கிலம் படித்து லௌகிகத் தேர்ச்சி பெற்றவர்கள் எழுதும் நூல்கள் பழிப்புக்கு இடமற்றிருக்க வேண்டுமே. அவற்றிலும் அப்ராமாணிக விஷயங்களும் இதர ஆசார்ய தூஷணைகளும் மலிந்திருந்தால் எவ்வளவு வெறுக்கத்தக்க தாயிருக்குமென்பதை விவேகிகள் விமர்சிப்பது.

இப்போது நாம் ஆராய்ச்சி செய்ய எடுத்துக்கொண்ட தேசிக சரித்திரம் ஸ்ரீமான் திண்டுக்கல் ராமஸ்வாமி ஐயங்கார் பி. ஏ., பி. எல். அட்வகேட் எழுதியது.

இவரும் மனத்தை நடுநிலையில் வைக்காது பொய்க்கதைகளையும் பொறாமைப் பேச்சுக்களையும் பொழிந்து எழுதினாரென்றால் இவரால் உலகம் என்னவுதவி பெற்றதாகும்? உண்மைக்கதைகளை யுணரவிரும்பும் பக்தர்களுக்கு இவர் என்னவுதவி புரிந்தாராவர்?

இப்பெரியார் எழுதியுள்ள தேசிக சரித்திரம் 16 பக்கங்கள் கொண்டது. இதிலுள்ள இதர ஆசார்ய தூஷணைகளை அநுவதிப்பதும் அபசாரமாகும். ஆனாலும் சிலவற்றை அநுவதிக்கிறோம்.

*(1)* "தேசிகருடைய காலத்தில் ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய ஸ்தானம் வஹித்திருந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் திவ்ய ப்ரபந்தத்தை மட்டும் அதிகரித்து ஸ்வகோஷ்டியில் உபந்யாஸம் செய்ய வல்லவர்களாக மாத்திர மிருந்தார்களே யன்றி ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்தங்களைப் பரிசயம் செய்து பிறமதத்தினரோடு வாதஞ் செய்ய உரியராக இல்லை." *(பக்கம் 8)*

*(2)* "தாம் கற்காத ஸ்ரீ பாஷ்யாதிகளை நன்கு கற்றுப் பன்முறை ப்ரவசனஞ் செய்து, தாம் கற்ற பிரபந்தங்களிலும் தம்மிலும் தெளிவான ஞானத்துடன் திகழ்ந்து தம்மிலும் மிகுந்த ஆதரத்தை அப்பிரபந்தங்கள் பால் செலுத்திய தேசிகன் விஷயத்தில், அதற்கு முன் ஸ்ரீரங்கத்தில் ஆசார்யகம் செய்து வந்தவர்களும் அவர்கள் சிஷ்யர்களும் பல்வகையான இடையூறுகளையும் ஹிம்ஸைகளையும் புரியத் தலைப்பட்டனர். அவர்களால் ஸ்வாமியடைந்த கஷ்டங்கள் பல." (பக்கம் 10)

*(3)* "தேசிகனிடம் பொறாமை கொண்டவருள் ஒருவரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இவருடன் போட்டியிட்டதன் பலனாக ஸ்வாமியிடமிருந்து ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரமென்ற க்ரந்தம் தோன்றியது." (பக்கம் 11)

*(4)* "ஆறாயிரப்படிக்குப் பின் தோன்றிய பல வியாக்கியானங்களிலுள்ள தோஷங்களைக் கணிசித்து அவற்றையெல்லாம் களைந்து தேசிகனருளிச்செய்த எழுபத்தினாலாயிரம் கிரந்தங்கள்கொண்ட நிகம பரிமளமென்னும் ஓர் அழகிய வியாக்கியானம் ஸ்வாமியாலே தம் குமாரருக்கு முன்பே காலக்ஷேபமாக ப்ரவசனம் செய்யப்பட்டிருந்தது." (இவை D. R. வாக்கியங்கள்.)

ஆக இந்த நான்கு பாராக்களை மாச்சரியமற்ற விவேகிகள் நோக்கவேண்டும். இந்த நான்கு தூஷணைகளும் பிரமாணிகமான தேசிக சரித்திர நூல்களில் சிறிதும் காணப்படாதவை. எந்த நூலை ஆதாரமாகக்கொண்டு இந்த அட்வகேட் இந்த தூஷணைகளைப் பெய்திருக்கின்றாரோ?

வட மொழியில் அமைந்துள்ள பிராமாணிகங்களான தேசிக சரித்திர நூல்களை இவர் பார்த்திருக்க ப்ரஸக்தியில்லை. இவர் 10-வது பக்கத்தில்,—"ஸ்ரீரங்கத்திலிருந்த இதர ஆசார்யர்களாலும் அவர்களின் சிஷ்யர்களாலும் தேசிகன் அடைந்த பல கஷ்டங்களை குரு பரம்பரைகளில் விளங்கக் காணலாம்" என்று வரைந்திருக்கக் காண்கையால் குருபரம்பரை யென்கிற நூலை இவர் நம்பியிருக்கிறாரென்றும் அதை ஆதாரமாகக் கொள்ளுகிறாரென்றும் புலப்படுகிறது.

விவேகிகள் இங்கே தெளியவேண்டியதாவது, இவருடைய ஸம்பிரதாயத்தில் மஹாமஹோபாத்யாய தேசிக தர்சநாசார்ய திருவஹீந்திரபுரம் சேட்லூர் நரஸிம்மாசாரியார் என்கிற ஒரு பெரியார் தோன்றியிருந்தாரென்றும் அவர் தேசிக சரித்திரம் முதலியவற்றைப்பற்றி 190 பக்கங்கள் கொண்ட புஸ்தகமொன்று எழுதி பல வருஷங்களுக்கு முன்பு வெளியிட்டிருக்கிறாரென்றும் உலகமறியும். அந்த நூலில் பிற்பகுதியின் உபோத்காதத்தில் (பக்கம் 129ல்) வைபவ ப்ரகாசிகை முதலிய சில நூல்களைக் குறிப்பிட்டு அவற்றில் பரஸ்பர விரோதங்கள் இருப்பதாகவும், எந்த விஷயமும் ஒரு புஸ்தகத்தில் கூறியபடி மற்றொரு புஸ்தகத்தில் கூறப்படவில்லையென்றும் விளக்கியுள்ளார். பிற்காலத்தவர்களான சில ஆராய்ச்சியாளர்கள் எழுதியுள்ள தேசிக சரித்திரமும் தேசிகருடைய ஸ்ரீஸூக்திகளோடு மிகவும் விரோதிக்கிறதென்றும் கூறியிருக்கிறார். தவிரவும் அதே புத்தகத்தில் முகவுரையின் 8வது பக்கத்தில் எழுதியிருப்பதாவது—''பிராசீனமாக ஏற்பட்டிருந்த குருபரம்பரா ப்ரபாவநூல்கள் இரண்டும் முன்னமே லோபித்துப் போயிற்று. அவை இப்போது கிடையா. பிறகு கல்பித்து அச்சிடப்பட்டு இப்போது காணப்படுகின்ற குருபரம்பரா ப்ரபாவம் பிரமாணமாக அங்கீகரிக்கத்தகாதது'' என்று கல்வெட்டாகவுள்ளது.

---

முக்கியமான குறிப்பு:—இந்த சேட்லூரையங்கார் எந்த தேசிக சரித்திரத்தை லுப்தமாய்விட்டதாக எழுதினாரோ அதை, தேசிகரெழுநூற்றாண்டு நிர்வாஹக ஸபையார் சிரமப்பட்டு ஸம்பாதித்துப் பலவாயிரம் பிரதிகள் அச்சிடுவித்து வெளியிட்டுள்ளார்கள். அது த்விதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வாமி பணித்ததென்று வெளியிட்டிருக்கிறார்கள். தமிழிலமைந்த அதனை ஸம்ஸ்க்ருதம், தெலுங்கு, ஆங்கிலம் ஆகிய மூன்று பாஷைகளிலும் மொழிபெயர்ப்பித்தும் வெளியிட்டிருக்கின்றார்கள். அவையொன்றிலும் காணப்படாத கதைகளையே D. R. கற்பனை செய்து எழுதியுள்ளார். இங்கு மிக முக்கியமான வார்த்தையொன்று;—உலகுக்கெல்லாம் ஆசாரியர்களாய் விளங்கின மஹாசாரியர்களை நிந்தித்து நிகமாந்த மஹாகுருவைப் புகழ்ந்துபேசுவது பொருந்தவேணுமானால், அந்த வேதாந்த மஹாகுருவின் ஸ்ரீஸூக்திகளை இவர்கள் ஆதரித்து வழிபடுமவர்களாயிருக்கவேண்டும். அதுதானில்லை. அவருடைய திவ்ய ஸூக்திகளுக்கு அத்யந்த விருத்தமாக ப்ரபத்த்யுபாயத்வம், லக்ஷ்மியுபாயத்வம், ஸ்வகத ஸ்வீகாரம், அத்ருஷ்டார்த்தம் முதலான பலவற்றை [அதாவது—தேசிகனோடு உறவு கொள்வதற்கு முன்பு தாங்கள் கொண்டிருந்த கொள்கைகளை] 'இவை தேசிகஸூக்தி விருத்தங்களேயென்று நன்கறிந்துவைத்தும் வீண் பிடிவாதமாகக் கொண்டிருப்பதனால் தேசிகனைக் கொண்டாடுவதும் அஸ்தாநேயாயிற்று. இவர்கள் தேசிகனோடு உறவுக்கொண்டாட ஆரம்பித்த காலத்தில் வாழ்ந்தவரான திருமழிசை அண்ணாவப்பங்கார் ஸ்வாமி பணித்த சுலோகம்— ''கர்வோபி நிர்வாபித இத்யவாதீத் உத்திச்ய யாந் ஸ்ரீநிகமாந்தஸூரி:; தைரேவ தஸ்ய க்ரியதே ஸ்துதிர்யா தார்க்ஷ்யஸ்துதிஸ் ஸா புஜகப்ரக்ல்ப்தா'' என்பது. இதன் பொருளாவது—தேசிகன் *நிர்விஷ்டம்யதிஸார்வபௌமவசஸாம் ஆவ்ருத்திபிர் யௌவநம்* என்று தொடங்கிப் பணித்த சுலோகத்தில் ''அஸதாம் கர்வோபி நிர்வாபித:'' என்றதற்கு

இவ்வட்வகேட்டின் சமயத்தில் தலைச்சிறந்து விளங்கின அப்பெரியார் மறுத்துத் தள்ளின அபத்தச்சவடியை இவர் தலையான பிரமாணமாகக் கொள்ளுகிருரென்ருல் இதனில் மிக்கதொரு மருள் உண்டோ?

இப்போது இந்த அட்வகேட் என்ன சொல்ல வருவரென்ருல், அவர் மறுத்தால் எமக்கென்ன? அவரிட்டதே சட்டமென்று யாரும் இசையமுடியாது. அந்த குருபரம்பரை பிரமாணமென்றே என் மனத்தில் பட்டபடியால் நான் அதைத் தழுவுகிறேன் என்பர். இந்தப் பேச்சுக்கு மதிப்பு கொடுக்கவேண்டிய பொறுப்பு மத்யஸ்த மஹநீயர்களைச் சார்ந்தது. ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்த ப்ரவர்த்தகர்களான மஹாசார்யர்களைத் தூஷித்துப் புஸ்தகங்களெழுதுவதே எமது ஸம்பிரதாய முன்னேர்களின் தன்மை என்று இவ்வட்வகேட் ஸ்தாபிக்கத் துணியவுங்கூடும். அது கிடக்க. மேலே குறித்த நான்கு பாராக்களிலுங்கண்ட தூஷணைகள் சிறிதும் பொருந்தமாட்டாவென்பதை இனி நிருபிப்போம்.

(1) தேசிகருடைய காலத்தில் ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய ஸ்தானம் வஹித்திருந்த ஸ்ரீ வைஷ்ணவர்களென்று இவர் குறிப்பிடுவது லோகாசார்யரென்று புகழ்பெற்ற நம்பிள்ளையின் சிஷ்யவர்க்கங்களையே யென்பது வெளிப்படை. இவர் தாமே மேலே அழகிய மணவாளப் பெருமாள் நாயனுரென்று திருநாமத்தை ஸ்பஷ்டமாகவே குறிப்பிட்டிருக்கிருர். அவர் வடக்குத் திருவீதிப் பிள்ளையின் இளைய திருக்குமாரர். அஷ்டாதச ரகஸ்யாதி க்ரந்த கர்த்தாவான பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியார். இவரும் இவரைப்போன்றவர்களுமான ஆசாரியர்கள் [தென்னுசார்ய ஸம்பிரதாயத் தலைவர்கள்] திவ்ய ப்ரபந்தத்தை மட்டுமே அதிகரித்தவர்களென்றும் ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்தங்களைப் பரிசயம் செய்யாதவர்களென்றும் இவர் எந்த பிரமாணங்கொண்டு அறிந்தாரென்று விசாரிக்கவேண்டும். ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய பதவியை நிர்வஹித்த மஹநீயர்களில் நால்வரே தேசிகருடைய காலத்தில் இருந்தவர்களாக இவ்வட்வகேட் எண்ணியிருக்கவேண்டும். (1) வடக்குத் திருவீதிப்பிள்ளை, (2) பெரியவாச்சான் பிள்ளை, (3) பிள்ளை லோகாசார்யர், (4) அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர்.

---

இலக்கானவர்கள் தாமே அந்த தேசிகனைக் கொண்டாடுவது ஸர்ப்பங்கள் கூடி கருத்மானைக் கொண்டாடுவதோடொக்குமத்தனை என்கை. இவர்கள் சங்கராசாரியரைப் புகழ்வதோடு தேசிகனைப் புகழ்வதோடு ஒரு வாசியில்லை. "ஸ்ரீவைஷ்ணவர்கள் பாதரக்ஷைகளைத் தோரணமாகக் கட்டிவைத்துப் பரிபவித்தார்கள், நிமந்த்ரணத்திற்கு இசைந்திருந்து வஞ்சித்தார்கள், காலைப் பிடித்திழுத்துத் தெருவிலே தள்ளினுர்கள்" என்றிப்படிப்பட்ட நிஹீந கதைகளைக் கற்பனை செய்து காட்டுவதனுல் யாருக்கு அவத்யம் என்பதைத் தெரிந்துகொள்ளமாட்டாத இவர்களைப்பற்றி சோகிக்கவேண்டியது தவிர வேறில்லை. இத்தகைய ஹிம்ஸைகளைப் புரிவதற்காகவே பிள்ளை லோகாசாரியர் முதலானுர் ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்தார்களாம். நால்வர் எண்மர் பதின்மரைத் திரட்டி உணவளித்து இத்தகைய கதைகளைக் கூறிக் கண்ணநீர் பெருக்குவது ஒரு போதுபோக்கு.

ஆக இந்நால்வரும் ப்ரவசனம் செய்தவளவோடு நில்லாமல் தொண்டர்க் கமுதுண்ண நூல் மாலைகளையும் அருளிச்செய்துள்ளாரென்பது உலகப்பிரஸித்தம். அந்த திவ்ய க்ரந்தங்களில் உபய வேதாந்தப் பொருள்களும் கமழ நின்றனவென்பது அநுபவ ரஸிகர்களுக்குத் தெரியும். ஸ்ரீ பாஷ்யாதி ஸாகரத்தில் ஆழ மூழ்கி அரிய பெரிய ரத்னங்களைக் கொணர்ந்தே மேற்சொன்ன நால்வரும் க்ரந்தங்களை யருளிச் செய்துள்ளார்களென்பது அவற்றில் அவகாஹித்த மஹான்களுக்குத் தெரியும். ''லவணவணிஜ: கர்ப்பூரோத்கம் கிமித்யபிமந்வதே'' என்று தேசிகர் கூறியபடி உப்பு வியாபாரிக்குக் கற்பூரத்தின் மதிப்பு தெரியாதன்றோ?

இவ்வாசாரியர்கள் வடமொழியில் க்ரந்தங்களெழுதவில்லை யென்கிற காரணங்கொண்டு பழிப்பதானால் ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான் பட்டர் எங்களாழ்வான் அம்மாள் அப்புள்ளார் முதலான ஆசாரியர்கள் தமிழில் ஒன்று மெழுதவில்லை யென்கிற காரணங்கொண்டு அவர்களைத் தமிழ்ப் பரிசயம் பண்ணாத வர்களாகப் பழிக்கின்றவர்களுக்குத் துணைவராகவேண்டும். ஒரு பாஷையிலும் ஒரு நூலு மெழுதாத ஆசாரியர்களும் பலருளர். உடையவரோடு 18 நாள் தர்க்கித்த மஹா வித்வானான யஜ்ஞ மூர்த்திகள் அருளாளப் பெருமாளெம்பெருமானாராகி ஞானஸாரம் பிரமேய ஸாரமென்கிற இரண்டு தமிழ்ப் ப்ரபந்தங்களைப் பணித்தாரே யல்லது வடமொழியில் ஒரு சுலோகமுமிட்டிலர்.

ஷட்தர்சனங்களுக்கும் ஷடாஸனமிட்டிருந்து மஹா வித்வச் சிகாமணியாகப் பேர்பெற்று பட்டரோடே வாதயுத்தம் பண்ணின வேதாந்திகள் நஞ்சீயராகி திவ்ய ப்ரபந்தார்த்த ப்ரவசனத்தோடு நின்றாரேயல்லது வேறொன்று செய்ததாகத் தெரியவில்லை.

நம்பிள்ளையைப் பற்றிப் பெரியவாச்சான் பிள்ளை யெழுதும்போது [பெரிய திருமொழி 5—8—7 *ஓதுவாய்மையு முவனியப் பிறப்பு முனக்கு முன்தந்த அந்தணனொருவன்* என்ற விடத்து வியாக்கியானத்தில்]

> ''முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையுமதிகரித்து பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளு மதிகரித்து போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம் நம்பிள்ளையைப் போல''

என்றருளிச் செய்துள்ளார். ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய பதவியை யலங்கரித்த ஒவ்வொரு ஆசிரியரும் இத்தகைய யோக்யதை பெற்றன்றோ விளங்கினர். அப்படிப்பட்ட மஹாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளைக் காதால் கேட்கப் பெறாததோடு கண்ணால் பார்க்கவும் பாக்கியமற்ற இவ்வட்வகேட் தன்னளவறியாமல் அவர்களுடைய யோக்யதையில் குறைகூறப் புகுந்தது பெருத்த ஸாஹஸம்.

அவ்வாசிரியர்கள் ஸ்வகோஷ்டியில் மாத்திரம் உபந்யாஸம் செய்ய வல்லவர்களாயிருந்தார்களே யல்லது பிறமதத்தினரோடு வாதஞ்செய்ய உரியனராக இருந்திருக்கவில்லையென்று இவரெழுதியுள்ளதையும் ஆராய்வோம். பிறரோடு வாத

யுத்தம் பண்ண இன்னுருக்கு யோக்யதை யிருந்தது, இன்னுருக்கு இல்லை என்பதை
இப்போதுள்ளாரறிய ஒரு ஸாதனம் வேண்டுமே. ஒரு காரியத்தில் யோக்யதை
பெற்றவர்கள் அக்காரியத்தை அவசியம் செய்தேயாக வேண்டுமென்கிற நிர்ப்பந்த
மில்லை. பரிபூர்ண யோக்யதை பெற்றவர்களும் வாதயுத்தத்தில் ப்ரவ்ருத்தராகாம
லிருப்பதுண்டு. தேசிகரையே யெடுத்துக்கொள்வோம். இவர் வாதயுத்தம் பண்ணு
வதில் புலியும் சிங்கமும் போன்றவர் என்பது நிர்விவாதம். ஆனுல் இவர் தர்சந
ஸ்தாபநார்த்தமாக க்ரந்தங்கள் எழுதுவதோடு நின்ருரேயல்லது ஒரு ஸபையிலும்
சென்றவரல்லர். ஒரு வாதமும் [வாய்ச்சண்டை] செய்தவரல்லர் என்பது அவரு
டைய திநசர்யையில் ஏடுபடுத்தப்பட்டு விளங்கா நின்றது. அந்த திநசர்யை ப்ர
ஸித்தமானதன்று. பக்தர்களின் நித்யாநுஸந்தானத்திலுள்ளதே. அதில் "ஸபா
புஜங்கீ குணபம் தருண்ய:" என்றிருப்பது ப்ரஸித்தம். ஸபையைப் பாம்பாகவும்
மாதரைப் பிணமாகவும் நினைப்பவர் தேசிகர் என்றதிதில். மாதரையும் அணுக
மாட்டார், ஸபையையும் அணுகமாட்டார் என்று ஸ்பஷ்டமாகக் கூறித் துதித்
திருக்க, இவரும் வாதயுத்தம் பண்ணினுரென்று எழுதியிருப்பதெல்லாம் பொய்க்
கதைதானே. இல்லாத கதைகளை யேற்றிட்டுப் பொய்யான ஐதிஹ்யங்களைக் கல்பனை
செய்வதனுல் என்ன பெருமை விளையும்.

ஸ்ரீரங்கத்தில் அத்வைதிகன் அட்டஹாஸம் செய்திருக்கலாம். ஸன்னிதி யுத்ஸ
வங்களை அவர்கள் தடைசெய்து விட்டார்களென்பது பரிஹாஸ்யமான பேச்சு.
தேசிகர் ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்தது சிலவாண்டுகள். அவர் வெளிநாடுகளில் வாழ்ந்த
காலத்தும் திருநாட்டுக் கெழுந்தருளிய பின்னரும் புறச்சமயிகள் வந்து வைஷ்ணவ
வழிபாடுகளைத் தடை செய்தால் என்ன ப்ரதிக்ரியையோ ? சததூஷணி அவதரித்த
தனுல் அத்வைதமதமே அடியற்றுத் தொலைந்துபோய்விட்டதாமோ? "இனி யாரும்
வைஷ்ணவ வழிபாடுகளைத் தடை செய்யலாகாது" என்று தேசிகர் ஏதேனும்
சாஸனமிட்டுப் போனுரோ ? சாஸ்த்ரம் கற்றவர்கள் அந்த சாஸ்த்ரங்களில் வாதுக்
கழைப்பர்களேயல்லது கோவில்களிற் சென்று குறும்புசெய்ய நினையாரே. முற்காலங்
களில் கோவில்களில் ஏற்பட்ட கோளாறுகளெல்லாம் அரசர்களின் கொடுங்கோன்
மையினுலன்றி வித்வான்களின் விஷமச் செயல்களினுலன்றே. ஸ்ரீரங்கத்தில்
ஆசார்ய பதவியை நிர்வஹித்துக்கொண்டிருந்தவர்கள் வாதயுத்தத்திற்கு எழுந்
தருளவில்லையென்றே வைத்துக்கொள்வோம். அதனுல் அவ்வாசிரியர்கட்கு ஞானக்
குறைகூற இடமுண்டோ ? நம் தரிசனத்தில் ஒரு முக்கியமான விஷயம் ஆலோசிக்
கப்படவேண்டும். ஆளவந்தார் "மீமாம்ஸாசாஸ்த்ரயுக்மச்ரம விமலமநா: ம்ருக்ய
தாம் மாத்ருசோந்ய:" என்றும் தாமே சொல்லிக்கொண்டபடி ஸர்வதோமுகமான
பாண்டித்யமும் ப்ராவீண்யமும் படைத்தவரென்பது நிர்விவாதம். இத்தனை
பெருமையோடு அவர் எழுந்தருளியிருந்தது உடையவர்க்குத் தெரியாதா? யாதவ
ப்ரகாசர் கூறின அபார்த்தங்களைக் கேட்டுக்கொண்டும் அவருடைய விஷமச் செயல்
களை ஸஹித்துக் கொண்டும் திரும்பத் திரும்ப அவரிடத்திலேயே சென்று உடைய
வர் வேதாந்தம் வாசித்ததாக எழுதப்பட்டிருக்கிறதே. ஆளவந்தார் காஞ்சீபுரத்
திற்கு எழுந்தருளியிருந்தும் அப்போதும் அவரிடத்தே போய் ஆச்ரயித்து வாசிக்கத்

தோன்றவில்லையே உடையவர்க்கு. இதனால், யாதவப்ரகாசருக்கிருந்த யோக்யதை ஆளவந்தாருக்கில்லை யென்றே உடையவர் எண்ணியிருந்ததாகத்தானே கொள்ள வேண்டிவருகிறது. இது வஸ்துஸ்திதியாகுமோ?

இங்கு முக்கியமாக வொன்று கேட்கிறேன் D. R. ஸ்வாமியை; கச்சிக்கு எழுந்தருளின ஆளவந்தார் யாதவப்ரகாசரை நேரில் கண்டிருக்கிறார்; அவர் வேதாந்தவாக்யங்களுக்கு அபார்த்தங்கள் சொல்லிவருகிறாரென்பதையும் ஆளவந்தார் அறிந்திருக்கிறார்; "ஓய் யாதவரே! என்ன அபார்த்தம் பிதற்றிவருகிறீர்? நம் எதிரே சிறிது சொல்லும் பார்ப்போம்" என்று தாமாக மடிபிடித்துத் தர்க்கிக்க லாகாதா?" என்று. இப்படிக் கேட்டால் "அதற்கு அவர்க்கு சக்தியில்லை" என்றே கூறுவர் நம் D. R. ஸ்வாமி. "வயம் ப்ரதிவாதிவாரண ப்ரகடாடோபவிபாடந க்ஷமா:" என்று கூறியிருக்கிறாரேயென்றால், அதெல்லாம் உளுபுளாய்க்குட்டியென்றும் துணிந்து சொல்லிவிடுவர்.

தேசிகர் ஶ்ரீரங்கத்திற்குச் சென்றார், வாதிகளை வென்றார், வெற்றிபெற்று நின்றார் என்றிப்படி எவ்வளவும் பெருமைகளை யெழுதலாம். இதர ஆசாரியர்களைக் குறைகூறி யிழித்துரைப்பதென்பது விரலுக்குத் தகாத வீக்கம்.

(2) இனி இரண்டாவது தூஷணத்தை எடுத்துக் கொள்வோம். தேசிகரே ஶ்ரீ பாஷ்யாதிகளை நன்கு கற்றவர் என்றும் மற்ற ஆசார்யர்கள் அவற்றைக் கல்லாதவரென்றும் இவ்வட்வகேட் வசை கூறுகிறார். அந்தோ! இதைக் கூறுவதற்கு இவரா அதிகாரி? தான் கற்ற கல்வி எவ்வளவு? என்பதையறியமாட்டாதே இப்படியா ஆசார்யாபசாரப் படுகுழியில் விழ்வது! ஶ்ரீ பாஷ்யாதிகளில் தேசிகருடைய ஜ்ஞானம் எத்தகைத்து? மற்ற ஆசாரியர்களின் ஜ்ஞானம் எத்தகைத்து? என்பதைக் கையிலங்கு நெல்லிக் கனியாகக் கண்டறிந்து நிர்ணயிக்க ஸாதநம் இல்லாமற் போகவில்லை. ஶ்ரீபாஷ்யத்தை முப்பது தடவை ப்ரவசநம் செய்தாலென்ன? முந்நூறு விசை ப்ரவசனஞ் செய்தாலென்ன? அது விஷயமாக எத்தனை க்ரந்தங்கள் எழுதினால்தான் என்ன? ஶ்ரீ பாஷ்யத்திற்கு எது உயிரான பொருளோ அதை நன்கறிந்த ஆசிரியர் யாவர் என்பதை ஒரு நொடியில் நிர்ணயிக்க அருமையில்லையே.

(1) ஶ்ரீபாஷ்ய விஷயமொன்றை இங்கெடுத்துக் காட்டுவோம். இதை அவகாஹித்துக் கொள்ளுதல் ஸம்ஸ்க்ருத வாஸனையற்றவர்கட்கும் நிலமாம்படி மிகத் தெளிவாக எழுதுகின்றோம். ப்ரஹ்மஸூத்ரம் இரண்டாமத்யாயம் முதற்பாதத்தில் *ச்ருதேஸ்து சப்தமூலத்வாத்* என்கிற ஸூத்ரத்தில் என்ன ஸித்தாந்தம் செய்யப்பட்டதென்பதை ஶ்ரீபாஷ்யத்திலும் வேதாந்த தீபத்திலும் வேதாந்த ஸாரத்திலும் எளிதாக அறியலாம். சாஸ்த்ரமொன்றே கொண்டு அறிய வேண்டியதான ப்ரஹ்மஸ்வரூபம் இதர ப்ரமாணங்களினால் அறியப்படுகிற ஸகல வஸ்துக்களிற் காட்டிலும் விலக்ஷணமாகையாலே அவ்வஸ்துக்களிற் காணப்படாத ஆச்சரியமான சக்தி பகவானிடத்தில் இருந்தே தீரும். ஆகவே எதையும் பகவானிடத்தில் அஸம்பாவிதமென்று கொள்ளலாகாது. ஒரு விஷயத்தை பகவானிடத்தில் சாஸ்திரம்

4

சொல்லிற்றென்றால் அதை அப்படியே ஒப்புக்கொள்ளவேணுமே தவிர இது எப்படி ஸம்பாவிதமாகுமென்று குசோத்யம்செய்து மறுக்கலாகாது; அப்படி குசோத்யம் செய்வதானது பகவானுடைய விசித்ர சக்தி விசேஷத்தை யறியாமையோ அல்லது இசையாமையோ ஆகும்-என்று ஸ்ரீபாஷ்யம் முதலானவற்றில் நிர்ணயிக்கப் பட்டிருப்பது தெளிவான விஷயம்.

ஜகத்துக்கு நிமித்த காரணமான பகவானை உபாதாந காரணமாகவும் கொள்ளக்கூடாதென்றும் அப்படி கொள்வது உலகிற்காணும் நியாயத்திற்கு விருத்தமென்றும் தோன்றிய பூர்வபக்ஷத்தை தேசிகரும் ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீஸூக்திகள் காட்டிய வழியிலேதான் கண்டித்திருக்கிறார். அவர்தாமே பகவானுடைய வ்யாப்தி விஷயத்தில் எழுதும்போது ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்திகளை மறந்தோ உதறித் தள்ளியோ எழுதியிருக்கிற விஷயம் ரஹஸ்யத்ரயஸாரத்தில் மூலமந்த்ராதிகாரத்தில் காண்மின்:— [அங்கு]

"வ்யாப்தனுக்கு ப்ரதிவஸ்து பூர்ணத்வமாவது.........வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தியன்று. இது கொள்ளில் பஹிர் வ்யாப்திக்கு விருத்தமாம்"

என்று எழுதிவைத்திருப்பது ப்ரஸித்தம். வஸ்துதோறும் ஸ்வரூபம் ஸமாப்தமாயிருந்து பஹிர்வ்யாப்தியும் குறைவற்றிருக்க பகவானுக்கு முடியாதென்பதன்றோ தேசிகருடைய கருத்து. நியாய ஸித்தாஞ்ஜனத்தில் தாமே மிகமிக சர்ச்சைசெய்து முடிவு கட்டினதையும் மறந்து எழுதிய பங்க்திகளிவை — என்பது நம்மால் சிலாலிகிதமாக்கப்பட்டுள்ளது. அந்த விரிவு இங்கு வேண்டா. (2) சாரீரக மீமாம்ஸை—இரண்டாவது அத்யாயம் மூன்றாவது பாதத்தில் *பராத் து தத் ச்ருதே:* *க்ருதப்ரயத்நாபேக்ஷஸ் து விஹிதப்ரதிஷித்தாவையர்த்யாதிப்ய:* என்கிற ஸூத்ரங்களின் ஸ்ரீபாஷ்யத்தையும், நடாதூரம்மாளுடைய தத்வஸார ஸ்ரீஸூக்தியையும் உதறித்தள்ளி *அந்யமிந்த்ரம் கரிஷ்யாமி பண்ணின விஷயம் அதிகரண ஸாராவளியில் அதிப்ரஸித்தம். மாககவியின் அற்புதமான சுலோகமொன்று கேளீர்— *அங்காதிரோபிதம்ருகச் சந்த்ரமா ம்ருகலாஞ்சந:, கேஸரீ நிஷ்ட்டுரக்ஷிப்தம்ருகபூகோ ம்ருகாதிப:* என்பது. "ஆனைக்கும் அடிசறுக்கும்" என்பதிலே சேர்ந்தவை இவை.

இதர ஆசாரியர்கள் ஸ்ரீபாஷ்ய பரிசயம் பண்ணாதவர்களென்று இவ்வட்வகேட் எழுதுவது தெரியாமையாலாமத்தனை. அவர்களின் ஸ்ரீஸூக்திகளெல்லாம் ஸ்ரீபாஷ்யமே தமிழ் வடிவு கொண்டதென்னும்படியாகவன்றோ இருக்கிறது. ஓரிடத்திலாவது அணுவளவாவது ஸ்ரீபாஷ்ய விரோதம் காட்டவோ சங்கிக்கவோ முடியுமோ? "தண்டாமரையினுடன் பிறந்தே தண்டேன் நுகரா மண்டூகம்" என்றாற்போல ஸ்ரீபாஷ்யத்தை இரவும் பகலும் உருப்போட்டும் அதிலுள்ள ஸாரத்தை உட்கொள்ள உரிமையில்லையாயிற்றே மற்றையோர்க்கு.

(3) இனி மூன்றாவது தூஷணையின் ஆராய்ச்சி. "தாம் கற்ற பிரபந்தங்களிலும் தம்மிலும் தெளிவான ஞானத்துடன் திகழ்ந்து தம்மிலும் மிகுந்த ஆதரத்தை அப்பிரபந்தங்கள்பால் செலுத்திய தேசிகன்" என்கிறார் அட்வகேட். திவ்யப்ரபந்தங்ளில் இதர ஆசார்யர்களைவிட தேசிகர் தெளிவான ஞானம் பெற்றபடிக்கு இரண்

டொரு உதாரணங்களாவது எடுத்துக்காட்டி யிருந்தால் அழகாயிருக்கும். ஸ்ரீபாஷ்யத்தில் இவர் தெளிவான ஞானம் பெற்றமை கீழே நிரூபிக்கப்பட்டது. அப்படியே திவ்யப்ரபந்தத்தில் அவர்க்குண்டான தெளிவையும் சிறிது நிரூபிப்போம்.

பெரியாழ்வார் திருமொழியில் (4—9—2) "என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர்போலும்" என்கிற பாசுரமிருப்பது ப்ரஸித்தம். பெருமாளுக்கும் பிராட்டிக்கும் ஒரு ஸம்வாதம் நடந்ததாக இப்பாசுரத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. பிராட்டியின் புருஷகாரத்தினுல் சில சேதநர்களை எம்பெருமான் அநுக்ரஹத்திற்கு இலக்காக்கின பிறகு, அப்பிராட்டியானவள் எம்பெருமானுடைய திருவுள்ளவுறைப்பைத் தெரிந்துகொள்வதற்காக 'பிரானே! மஹாபராதிகளான சேதநர்களை அங்கிகரித்துவிட்டீரே; நான் கூட ஏதோ தெரியாமல் புருஷகாரம் செய்துவிட்டேன்; இவர்களுடைய குற்றங்கள் எனக்கும் இப்போதுதான் விசதமாகத் தெரியவந்தன. இப்படிப்பட்ட குற்றவாளிகளை நீர் அங்கீகரிக்கலாகாது' என்றுளாம். அதற்கு எம்பெருமான் என்ன மறுமொழி கூறினுனென்றால், 'என்னடியார்கள் ஒருகாலும் நீ சொல்லுகிறபடி குற்றம் செய்திருக்கமாட்டார்கள்; ப்ரக்ருதிவசாத் ப்ராமாதிகமாகச் செய்திருந்தார்களானுல் அது எனக்கு நன்றே காண்'—என்றுனும். இந்த ஸம்வாதத்தை யெடுத்துரைத்த பெரியாழ்வார் அந்த அடியின் முடிவில் 'என்பர்போலும்' என்று அருளிச் செய்திருக்கிறார். போலும் என்கிற விது ஆழ்வாரருளிச்செயல்களில் ஆயிரமிடங்களில் வருகிறது.

"பின் தொடர்ந்தோடியோர் பாம்பைப் பிடித்துக்கொண்டாட்டினுய் போலும்"
"விளங்கா யெறிந்தாய் போலும்" "வாரி வளைத்துண்டிருந்தான் போலும்"
"மரமேறியிருந்தாய் போலும்" "நாகத்தினேடு பிணங்கி நீ வந்தாய் போலும்"
"எந்தை பெருமானூர் மருவிநின்றவூர் போலும்" "தேவதேவனூர் போலும்"

என்றிப்படி பல்லாயிரமிடங்கள் காணலாம். இவ்விடங்களில் போலும் என்பதற்கு என்ன பொருளென்பதைத் தமிழில் சிறிது பரிசயமுடையவர்களும் அறிவர்கள். வடமொழியில் "இமிவ ஹி மதுராணும் மண்டநம் நாக்ருதீநாம்" என்பதுபோன்ற விடங்களில் இவ என்னும் இடைச்சொல்லுக்கு என்ன பொருளோ அதுவேதான் போலுமென்கிற விதற்கும் பொருளென்பதை சிரமமில்லாமல் அனைவருமறிவர்.

திவ்யப்ரபந்தங்களில் மிகத்தெளிந்த ஞானம் பெற்றவர் இவ்விடத்தில் என்ன தெளிவு காட்டியிருக்கிறுரென்று பார்க்கவேணும். இப்பாசுரத்தை ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில் எடுத்துக்கொண்டு தெளிவுகாட்டியுள்ளார்;—

"என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர் போலுமென்றவிடத்தில் போலுமென்று சொல்லுகையாலே இது வஸ்து வ்ருத்தியில் நன்றன்று என்னுமிடம் ஸூசிதம்" என்பது அவ்விடத்தில் தேசிகருடைய திருவாக்கு. போலும் என்பதற்கு இவர் காட்டியுள்ள கருத்து சிறிதேனும் பொருந்துமாவென்று அறிவுடையார் பார்க்கவேணும். வாக்யாலங்காரமானவிதற்கு ஒரு பொருள் கொண்டேயாக வேணுமென்று நிர்பந்தம் கொண்டாலும் தேசிகர் கூறியுள்ள

பொருள் பொருந்த வழியுண்டோ? போலுமென்கிறவிது எந்தச் சொல்லின் பக்கத்திலே விழுந்திருக்கிறதென்பதை நோக்கவேண்டாவோ? "செய்தாரேல் நன்று" என்றதன் பக்கத்தில் இது இருந்தாலாவது இவர் பணிக்கும் பொருள் ஒருவாறு ஏற்குமென்னலாம். அங்கு இல்லையே. என்பர் என்ற வினைமுற்றின் பக்கத்திலன்றோ அது கிடக்கிறது. செய்தாரேல் நன்றன்று என்கிற பொருளை அது காட்டுமென்று ஸ்தாபிக்க ஏழேழ்பிறவி தவம் புரிந்தாலுமாகாதே. நலிந்து கோடல் முறையில் அப்படி காட்டுமென்றே வைத்துக்கொள்வோம். அப்பொருள் அந்த ப்ரகரணத்திற்குச் சிறிதேனும் சேருமா? எம்பெருமானுடைய உயர்ந்தவொரு குணத்தைக் காட்டுவதற்கன்றோ பெரியாழ்வார் இந்த ஸம்வாதத்தை யமைத்துப் பாசுரம் பாடினார். "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேததகர்ஹிதம்" என்கிற ஸ்ரீராமாயண ஸூக்தியையும் "அபி சேத் ஸுதுராசாரோ பஜதே மாமநந்யபாக், ஸாதுரேவ ஸ மந்தவ்ய:" என்கிற கீதாஸூக்தியையும் மூலமாகக் கொண்டன்றோ இப்பாசுரம் அவதரித்துள்ளது. மற்றொரு விஷயம் கேண்மின்.

திருவாய்மொழியில் *(3—4—4)* *வம்பவிழ் கோதை பொருட்டா மால் விடையேழுமடர்த்த* என்கிற பாசுரத்தில் 'வம்பவிழ் கோதை' என்பதற்கு என்ன பொருளென்றால் 'நறுமணம் மிக்க பூமாலையை யணிந்துள்ளவள்' என்பதாகும். இது அன்மொழித்தொகை. (பஹுவ்ரீஹிஸமாஸாந்தபதம்.) பிரகரணம் நோக்கி நப்பின்னைப் பிராட்டியென்று முடியும். கண்ணபிரான் நப்பின்னைக்காக ஏழெருதுகளை வலியடக்கின விருத்தாந்தம் இங்கு அநுஸந்திக்கப்படுகிறது. இங்கே கோதையென்பது கொழுத்த தமிழ்ச்சொல். தேசிகர் பணித்த த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் இப்பதிகத்திற்கான ச்லோகத்தில் "கோதார்த்தோக்ஷாவமர்தே" என்று அப் பாசுரத்திற்கு ஸாரமாக அருளிச் செய்திருக்கிறது. 'கோதாதேவிக்காக எருதடர்த்ததாக ச்லோகமியற்றிவிட்டார். கோதா என்கிற வடசொல் ஆண்டாளுக்கு வாசகமேயல்லது நப்பின்னைக்கு வாசகமன்று. "நீளாதுங்கஸ்தநகிரிதட" என்கிற திருப்பாவைத் தனியனில் நீளா என்பதே நப்பின்னைக்கு வடமொழித்திருநாமமாக நன்கு காட்டப்பட்டிருக்கிறது. கோதா என்பது ஆண்டாளுக்குத் திருநாமமேயல்லது மற்றொருத்திக்கும் திருநாமமன்று என்பது கோதா ஸ்துதி பணித்த தேசிகற்குத் தெரியாததன்று. "கோதா தஸ்யை நம இதமிதம்" என்கிற தனியனை நிச்சலும் அநுஸந்திப்பவர்களுக்கும் நன்கு தெரியும். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியான கோதைக்காகக் கண்ணபிரான் எருதடர்க்கவில்லையென்பதும் உலகமறியும். இப்படியிருக்க, இங்குத் திருவாய்மொழியில் "கோதை பொருட்டா" என்றிருப்பதையே பார்த்துவிட்டு "கோதார்த்த" என்று ச்லோக மெழுதி விட்டார் தேசிகர்.

இது பண்டிதர்களுக்காக இயற்றினதா? பாமரர்களுக்காக இயற்றினதா? என்று ஒருவராலும் நிர்ணயிக்க முடியாமலிருக்கிற த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியோடு நிற்காமல் *நன்று செய்தாரென்பர் போலுமித்யாதியான சில பாசுரங்களைக் கைப்பற்றி அஸந்தர்ப்பவுரைகளையும் எழுதி வைத்திருப்பவரை திவ்யப்ரபந்தங்களிலும் தெளிவான ஞானத்துடன் திகழ்ந்தவராகப் புகழவேண்டியது மிக அவசியமே.

திவ்யப்ரபந்தங்களில் இதர ஆசாரியர்கள் செலுத்தாத ஆதரத்தை இவர் செலுத்தினாரென்று எழுதுபவர் அதற்கொரு சான்று காட்டியிருந்தால் அழகியதே. நம்மாழ்வாரை விபவதசையிலேயே அடிபணிந்திருந்த அந்தணர் தலைவரான மதுரகவிகள் தேவுமற்றறியேன் என்று படுகாடு கிடந்தது ஸ்பஷ்டமாக விளங்காநிற்க அதற்குமாறாக ஆழ்வார் முக்திதசையில் உபாதேயரேயல்லது விபவ தசையில் உபாதேயரல்லர் என்று சததூஷணியில் ஸ்தாபித்து வைத்ததை அறியாதாரில்லை. அதில் (65-வது வாதத்தில்) "ஸத்ரீதர்மிண்யாமாத்மஜநந்யாமிவ" என்று ஒரு உதாஹரணமும் காட்டியுள்ளார். நம்மைப் பெற்றெடுத்த திருத்தாய் எவ்வளவோ பூஜிக்கத் தகுந்திருக்கச் செய்தேயும் ரஜஸ்வலையான காலத்தில் எப்படி அவளை அணுகுவதில்லையோ அப்படியே கீழ் வருணங்களில் அவதரித்த ஆழ்வார்களை அந்த விபவ தசையில் ஒருவரும் அணுகியிருந்ததில்லை என்று எழுதிவைத்திருப்பது உலகமறியும். ஆழ்வார்களுக்கு இவ்வளவு ஸம்பாவனை செய்திருக்கிற சததூஷணியைக் கொண்டு ஸ்ரீரங்கத்தில் வைஷ்ணவ வழிபாட்டை நிலைநாட்டி விட்டாரென்று அட்வகேட் எழுதியிருப்பது விந்தையினும் பெருவிந்தையே. ஆழ்வார்களிடத்தும் அவர்களது ஸ்ரீஸூக்திகளிடத்திலும் இவர் செலுத்திய ஆதரம் இதுவே போலும்.

இப்படி உபயவேதாந்தங்களிலும் மகரஞ்சேர் குழையிருபாடிலங்கியாட நின்றவர் விஷயத்தில் இதர ஆசாரியர்கள் ஐயோவென்று இரங்கியிருக்க ப்ராப்தியுண்டேயல்லது பொறாமைப் படவும் ஹிம்ஸைகளைப் புரியவும் எவ்வன ப்ரஸக்தியோ அறியோம். நெடுநாள் ஹயக்ரீவரை யுபாஸித்து "ஜிகீஷதோ மே கவிதார்க்கிகேந்த்ரான்" என்று தாமே சொல்லிக்கொண்டபடி கவிகளோடும் கௌதஸ்குதர்களோடும் போராட ஆசைப்பட்டு அப்படியே பேறுபெற்று "தர்க்க பாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்கவல்லோம்" என்று ரஹஸ்யத்ரய ஸாரத்தில் எழுதிவைத்தபடியும் "அந்யேந்த்ரகம் புவநமந்யதநிந்த்ரகம் வா" என்று ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் பணித்த படியும் நடந்துபோந்த நம் ஸ்வாமியை அக்காலத்திருந்த ஆசார்ய ஸார்வபௌமர்கள் திருத்திப்பணிகொள்ளத் திருவுள்ளம் பற்றியிருக்கலாமேயல்லது வேறொன்று செய்ய ப்ரஸக்தியில்லை. வஸ்துஸ்திதி இங்ஙனேயிருக்க, இவர்மீது அவர்கள் பொறாமை கொண்டார்களென்பதும் பலவாறு ஹிம்ஸித்தார்களென்பதும் அப்பேராசிரியர்களின் பிரபாவக்கடலில் ஒரு திவலையளவும் அறியப்பெறாமையின் பயனேயாம். ஆத்மகுண பரிபூர்த்தியில் தலை சிறந்து விளங்கின மஹாசார்யர்களைப்பழித்தா இவருக்கொரு பெருமை ஸாதித்துக்கொள்ளவேண்டும்.

(3) ஆசார்ய ஹ்ருதயமருளிச்செய்த அழகியமணவாளப்பெருமாள் நாயனார் தேசிகரிடம் பொறாமை கொண்டவராய் தேசிகரோடு போட்டியிட்டாராம். அதன் பயனாகப் பாதுகாஸஹஸ்ரம் அவதரித்ததாம். இதுவும் விந்தையான கட்டுக்கதை. ஆசார்ய சம்புவிலும், சண்டமாருதம் தொட்டையாசார்யர் இயற்றியதாகச் சொல்லிக்கொள்கிற வைபவப்ரகாசிகையிலும் முன்னோர்கள் இயற்றிய பாதுகாஸஹஸ்ரவ்யாக்யாந அவதாரிகையிலும் கூறப்படாததும், கூறப்பட்டுள்ளதற்கு முரண்பட்டதுமான ஐதிஹ்யத்தை நவீநர்கள் கற்பனை செய்து எழுதிவிடுமளவால்

பிராமாணிகமான விஷயம் பழுதுபடாது. முன்னோர்கள் யாவரும் எழுதிவைத்திருப்பது மறைந்து போகவில்லை. யாரோ வொரு கவி தேசிகரிடம் வந்து செருக்குடன் சில வார்த்தைகள் சொன்னதாகவும் அவனையெதிரிட்டுக்கொண்டு பாதுகா ஸஹஸ்ரம் பணித்ததாகவும் இவ்வளவே ஆசார்ய சம்பூ முதலிய பழைய வைபவ நூல்களிற் கூறப்பட்டுள்ளது. இந்த எதிரீட்டுக்கு இலக்கானவர் பிறமதத்தவரேயன்றி ஸ்ரீ ராமாநுஜ ஸம்பிரதாயத்தைச் சேர்ந்தவர் யாருமல்லர். நம் பூர்வாசார்ய பரம்பரையில் ஒரு ஆசார்யரும் செருக்குக்கொண்டவராகவோ பொறாமையுள்ளவராகவோ ஆசார்ய பதவி வஹித்தாரல்லர். எம்பெருமானார் தர்சனத்திற்படிந்த ஆசிரியர்கட்குப் பரஸ்பரம் மனவருத்தப்படவும் போர்புரியவும் ப்ரஸக்தியேயில்லை. சமம் தமம் முதலிய எண்ணில் பல் குணங்கட்குப் பிறப்பிடமாயிருந்த பூருவாசாரியர்களும் நம்மைப்போல காமக்ரோத மதமாத்ஸர்யங்களுக்குக் கொள்கலமாயிருந்தனரென்பது என்ன வார்த்தை! தேசிகன் அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரை ஸேவிக்க பாக்கியம் பெற்றிலர். அவருடைய கடாக்ஷம் பெறுவதற்கு பாக்யம் செய்திலர். அவர் அருளிச்செய்த ஆசார்யஹ்ருதயத்தை மாத்திரம் கண்டபாடம் செய்திருந்தாரென்பது இவர் தாமியற்றிய குருபரம்பராஸார மென்கிற நூலினால் ஸுவ்யக்தம். (எங்ஙனே யென்னில்;) "மேகம் பருகின ஸமுத்ராம்பு போலே நூற்கடற்சொல் இவர்வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோப ஜீவ்யமாமே" என்கிற ஆசார்யஹ்ருதய சூர்ணையை குருபரம்பராஸாரத்தில் "மேகங்கள் ஸமுத்ர ஜலத்தை வாங்கி ஸர்வோப ஜீவ்யமான தண்ணீராக உமிழுமாப்போலே" என்று வாக்கியமாக்கினார். ஆசார்யஹ்ருதயத்திலேயே "தமிழ் மாமுனிதிக்கு சரண்யமென்றவர்களாலே............". இத்யாதியான சூர்ணையை "அகஸ்த்ய ஸேவிதமான தேசத்திலே அனேக தேசிகாபதேசத்தாலே அவதரித்தருளினான். இத்தைக் கணிசித்து. *கலௌ கலு பவிஷ்யந்தி...தாம்ரபர்ணீ நதீ யத்ர... ப்ரதிசீ ச மஹாநதீ* என்று மஹர்ஷி யருளிச்செய்தான்" என்று வாக்கிய மாக்கினார்.

பிறர் பொறாமை கொள்ளத்தக்க விசித்திரமான யோக்யதை பெற்றிருந்த தேசிகரிடத்தில் மற்ற ஆசாரியர்களுக்கு அஸூயை உண்டாகியே யிருந்ததென்று கொண்டாலும் "நாண் பெரியோமல்லோம் நாம் நன்றுந் தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" இத்யாதிகளான பலபல செஞ்சொற்களால் நைச்யாநுஸந்தான பரமகாஷ்டையிலே நின்ற தேசிகர் தமது ஆத்மகுணப் பெருமைக்கு விருத்தமாக நடந்துகொண்டாரென்றால் அவர்க்குப் பெருத்த தூஷணமேயன்றி பூஷணமாகமாட்டாது. முக்கியமான ஸித்தாந்த ஸ்தாபனத்திற்காக மாத்திரம் புறச்சமயிகளோடு வாதப்போர் புரிதல் தோஷமன்றென்றும் அது கைங்கர்யரூபமே யாகுமென்றும் சொல்லப்படாநிற்க, கவித்திறத்தில் வெற்றிபெறுதற்காக ஸமாந ஸம்ப்ரதாயஸ்தர்களுடனே எதிரீடு கொண்டாரென்னுமிப்பேச்சு தேசிகருக்குப் பரம லாகவத்தையே நிலைநாட்டி நிற்கும். ஆளவந்தார் முதலானோர் "ந வயம் கவயஸ்து கேவலம்" இத்யாதிகள் பேசினதும் ஸித்தாந்த ஸ்தாபனத்திற்காகவே. அதுவும் புறச்சமயிகள் திறத்தே.

கவனத்தில் மேன்மை பெறுவதென்பதை நம் பூருவர்கள் ஒரு பொருளாகவே மதித்திலர். கவிவிருது பெற்றோ, கவி விருது பெற ஆவல்கொண்டோ, கவித்திறத்தால் பிறரை வெல்ல விரும்பியோ ஒரு பூர்வாசார்யரும் விளங்கவில்லை. ஆளவந்தார் ஆழ்வான் பட்டர் முதலிய பூருவாசாரியர்கள் அமுதக்கடலான ச்லோகரத்னங்களை யருளிச்செய்துவைத்தும் ஒரு மூலையில்கூடத் தமது திருநாமத்தைக் குறிப்பிடாமலும் கவியென்று தம்மைக் காட்டிக்கொள்ளாமலு மிருந்தனர்.

எம்பெருமானார் திருக்குருகைப்பிரான் பிள்ளான் எங்களாழ்வான் நஞ்சீயர் நம்பிள்ளை பிள்ளை லோகாசாரியர் அவரது திருத்தம்பியார் ச்ருதப்ரகாசிகா பட்டர் முதலானோர் ஸர்வஜ்ஞர்களாயும் ஸர்வ சக்தர்களாயுமிருந்தும் கவிநாமார்க்கத்தில் கருத்தூன்றுதலின்றியே வெவ்வேறுவகையான போதுபோக்குடையராயிருந்தனர். இப்படிப்பட்ட ஆசார்யபரம்பரையில் வருகின்ற மஹான்கள் உபாஸந பலத்தினால் கவிதைகள் செய்துகொண்டும் கவிவிருது வஹித்துக்கொண்டும் போந்தவரோடு மார்புதட்டிப் போர்புரிய வருவதற்குக் கனவிலும் ப்ரஸக்தி யில்லையே.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் கவியியற்றுகிற மார்க்கத்தில் சென்றிருந்தாலாவது தேசிகரோடு போட்டிபோட வந்தாரென்று சொல்லலாம். ஸர்வாத்மநா ப்ரஸக்தியற்றதும் பொருத்தமற்றதுமான விஷயத்தைக் கல்பனை செய்வதனால் என்ன பயன்? வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயருக்கும் தேசிகர்க்கும் கவிதா விவாதம் விளைந்ததென்று சிலர் எழுதிவைத்தார்கள். அது அஸம்பவ பராஹதமென்று தெரிந்தபிறகு அவரைவிட்டு மற்றொருவரைப் பிடித்திழுக்கிறாரிவர். இவ்விஷயமும் அத்தகைத்தே யென்பதை இவர் ஆராய்ந்துணர வேணும். தேசிகர் தம்முடைய ஸமகாலத்திலிருந்த ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களையும் வென்று விளங்கினாரென்று ஸாதிப்பதற்காக இவர்கள் படும்பாடு என்னே!

ஒரு மாப்பிள்ளை மாமனாரகத்திற்குச் சென்றிருந்தார். மாமனார் ஸாயங்காலம் தீர்த்த பாத்திரம் கொணர்ந்துவைத்து 'மாப்பிள்ளை! ஸந்தியாவந்தனமாகட்டும்' என்றார். 'அப்பவே பண்ணியாயிற்று' என்றார் மாப்பிள்ளை. எங்கே பண்ணினீரென்று மாமனார் கேட்க, தெருக்கோடியிலுள்ள கேணியில் பண்ணினேனென்றார். 'ஆறுமாதமாய் அது உலர்ந்து கிடக்கிறதே' என்றார் மாமனார். 'தீர்த்தமிருக்கிறது என்று சொல்லக்கேட்டேனே' என்றார் மாப்பிள்ளை. 'நீர் ஸந்தியாவந்தனம் பண்ணினது கேள்விப்பட்ட தீர்த்தத்திலா? கண்ணால் கண்ட தீர்த்தத்திலா?' என்று மாமனார் கேட்க, "என்ன மாமா! கோர்ட்டில் கேட்கிறமாதிரி இப்படியெல்லாம் கேட்கிறீரே; நான்தான் தீர்த்த மிருப்பதாகக் கேள்விப்பட்டேனென்கிறேனே; கேள்விப்பட்ட தீர்த்தத்தில்தான் பண்ணினேன்" என்கிறார் மாப்பிள்ளை. நம் அட்வகேட்டின் பிரசங்கமெல்லாம் இதே ரீதிதான்.

"வயம் து ஹரிதாஸாநாம் பாதரக்ஷாவலம்பகா:" என்று சொல்லிப் பெருமை பெற்றவர்க்கு இதுவோ பெருமை! "ஸ்ரீவைஷ்ணவாநாம் கோஷ்டீஷு தத்தாஸ இதி விச்ருத:" என்பதும் அதை அனுஷ்டானத்தில் காட்டுவதுமன்றோ பெருமை. 'அதுவும் பெருமைதான், இதுவும் பெருமைதான்' என்பர். இப்பெருமையை முன்

ஞேர்களுடைய ஒரு நூலிலாவது காட்டிவிட்டால் உள்ளதேயென்று இசையலாம். ஆசார்ய சம்பூகாரர் எழுதியிருப்பது—''ஏவமாபத்தாபி: அபரிமிதாபி: க்ருதிபிரா பாதிதமநிதர ஸாதாரணமஸ்ய குரோரதிசயம் ஆசுகவிதாவிபவாதபாசிகிர்ஷு: கச்சந கவி: அப்ப்யாசமப்ப்யேத்ய கிரமிமாமபஹுதசங்கமங்குரயாமாஸ'' என்று.

வைபவப்ரகாசிகையிலோ வென்னில் (114வது சுலோகம்)

''ஸம்ப்ரார்த்திதஸ் ஸம்ஸதி ஸூரிவர்யை: பாதாவநீம் ரங்கபதேர் நிசாயாம், பத்யைஸ்ஸஹஸ்ரைர்குருரஸ்தவீத் ய: தம் பாவயேஹம் கவிஸார்வபௌமம்'' என்றுள்ளது. வித்வான்களின் வேண்டுகோளுக்கிணங்கிப் பாதுகா ஸஹஸ்ரமருளிச்செய்தாரென்பது இதன் கருத்து.

பாதுகா ஸஹஸ்ரத்தினுள்ளேயே நாதபத்ததியில் (41வது சுலோகம்) ''ப்ரக்யாதாநாம் பரிஷதி ஸதாம் காரயித்வா ப்ரதிஜ்ஞாம்'' என்ளுெரு சுலோகமுள்ளது. இதனுல் தேசிகர் தாமே ப்ரஸித்தர்களான ஸத்துக்களின் முன்னிலையில் ஆயிரம் சுலோகஞ் செய்வதாக ப்ரதிஜ்ஞைசெய்து இந்த ஸ்துதியை யியற்றினதாக ஸ்பஷ்டமாகிறது, இவ்விடத்து வியாக்கியானத்திலாவது முன்னோர்கள் ஏதாவது அவசியம் எழுதியிருக்கவேண்டும். இவ்வட்வகேட் எழுதியுள்ள ஐதிஹ்யம் உண்மையாயிருந்தால் இந்த ஸ்தோத்ரத்தின் அவதாரிகையிலோ இந்த ச்லோகத்தின் வியாக்கியானத்திலோ எழுதப்படாமல் விடுபட்டிருக்குமா வென்டதை விவேகிகள் விமர்சிக்க வேண்டும்.

இந்த ஸ்தோத்ரத்திற்கு வியாக்கியான கர்த்தாவான பாரத்வாஜ ஸ்ரீநிவாஸாசார்யர் ஸ்ரீவரவரமுநி ஸம்ப்ரதாயஸ்தராயிருந்து மாறுபட்டு தேசிக ஸம்பிரதாயத்திற்கு வந்து சேர்ந்ததாக எழுதிவைத்திருக்கிறுர்கள். அட்வகேட் எழுதுகிற படி விஷயமிருந்தால் அதை அவர் எழுதாது விட்டிருப்பரோ? அன்றியும், அட்வகேட் எழுதியுள்ள ஐதிஹ்யம் அபத்தம் என்று நிர்ணயித்துத் தரவல்ல விஷயங்களையுமன்றே அந்த வியாக்கியானகர்த்தா ஆரம்பத்திலேயே யெழுதியுள்ளார். அதாவது-

''ரங்காஸ்தநே ரஸிகபரிஷத் ப்ரேரணும் ப்ராப்ய சௌரே: பாதாவந்யா: ஸ்துதிமக்ருத யோ யைஸ்ஸஹஸ்ரேண பத்யை:'' என்கிற ச்லோகத்தை முன்னம் எழுதிவிட்டு உடனே ''ஸ்ரீமான் வேங்கடநாதோ குருர்ப்பகவதோ ரங்கநாதஸ்ய திவ்யாஸ்த்தாநரஸிகை: பாகவதைரப்ப்யநுஜ்ஞாதபாதுகாஸ்துதி: பாதுகாஸஹஸ்ரம் நாம காவ்யம் ப்ரணிநாய'' என்கிற வாக்கியத்தையும் எழுதியுள்ளார். இங்கு ஊன்றி நோக்கவேணும். ச்லோகத்தில் ''பரிஷத் ப்ரேரணும் ப்ராப்ய'' என்றுர். வசனத்தில் ''அப்ப்யநுஜ்ஞாத பாதுகாஸ்துதி:'' என்றுர். ப்ரேரணையும் அப்யநுஜ்ஞையும் பர்யாயமன்று. ஒரு கார்யத்தில் ப்ரவர்த்தியாதவனை ப்ரவர்த்திக்கும்படி ஏவுவது ப்ரேரணை. நான் இன்ன காரியஞ் செய்கிறேனென்று சொல்லி ஆரம்பித்தவனை நோக்கி அப்படியே செய்யலாமென்று அநுமதி பண்ணுவது அப்யநுஜ்ஞை. ஆகவே இங்கு ச்லோகமும் வசனமும் பொருந்தாமலிருக்கிறது. பொருந்தச் செய்ய வேணுமாஞல் இங்ஙனே பொருத்தலாம்;—தேசிகர் தம்முடைய ஆசுகவித்வ சாதுர்யத்தைக் காட்டுவதற்குத்தாமே பாதுகா ஸஹஸ்ரம் இயற்றுவதாக என்று

கொண்டார்; அதை ஸப்யர்கள் அநுமோதித்தார்கள்—என்றுதான் பொருந்தவிட வேணும்; இப்போது "ப்ரக்க்யாதாநாம் பரிஷதி ஸதாம் காரயித்வா ப்ரதிஜ்ஞாம்" என்கிற [முன்லேயெடுத்துக்காட்டிய] தேசிகருடைய வாக்கும் நன்கு பொருந்தி விடுகிறது.

ஆக இவ்வளவாலும் முடிந்த தென்னவென்றால், தேசிகர் தம்முடைய கவித்வப் பெருமையைக் காட்டுவதற்குத் தாமே யொரு ப்ரஸக்தியைச் செய்துகொண்டு தாமேயொரு ப்ரதிஜ்ஞையைப்பண்ணி ஸஹஸ்ரமெழுதிக் காட்டினார்—என்கிற இவ்வளவே உண்மையான அவதாரிகையாகத் தேறி நின்றது. இதில் ஒரு படியாலும் ஸம்பந்தப்படாத அழகியமணவாளப் பெருமாள் நாயனாரை இழுத்துப் பழிப்பதானது மஹாபசாரம், மஹாஸாஹஸம்.

இவ்வட்வகேட்டும் இவரைச் சேர்ந்தவர்களும் எவ்விதமாகப் பழகியிருக்கிறார்களென்றால், எதையாவது அஸம்பத்தமாக எழுதிவிடவேண்டியது; அது ஸர்வாத்மநா அஸங்கதமென்று நிபுணநிரூபணம் வெளிவந்தால் வாய்திறவாமே வாளா கிடந்து விடுவது, மற்றொரு காலத்தில் வேறொருவர் அந்த அஸம்பத்த ப்ரஸங்கங்களையே மறுபடியும் எழுதிச் சில பாமரர்களை மயக்குவது. இப்படியே இவர்களுடைய பழக்கம் வந்துவிட்டது. உறங்குகிறவர்களை வஞ்சித்தவரையில் லாபமென்பது இவர்களது நினைவுபோலும். இது பிராமாணிக வழியன்று. தம்முடைய விகிதம் அஸங்கதமென்று தெரியவந்தால் உடனே அநுதபித்து ஒழிவதுடன் அநுதாபத்தையும் உலகமறிய வெளியிடவேணும். காலஞ்சென்ற திருவஹீந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியரிடத்தில் ஒரு குணங்கண்டு உலகமுகப்பதை இங்கு நினைப்பூட்டுவோம். ப்ரபோதசந்த்ரோதய கர்த்தாவான க்ருஷ்ணமிச்ரனுக்கும் தேசிகருக்கும் நேரில் வாதப்போர் நடந்ததாகச் சிலர் ப்ரமித்து எழுதியிருந்ததை இவரும் நம்பியெழுதியிருந்தார். அதைக்கண்டு நாம் அந்த க்ருஷ்ணமிச்ரனுக்கும் தேசிகருக்கும் ஸமகாலிகத்வம் கிடையாதென்பதை அசைக்கமுடியாத பிரமாணங்களினால் நிரூபித்தெழுதி வெளியிட்டோம். அதைக்கண்டு ஷெ. சேட்லூர் ஸ்வாமி தம்முடைய ப்ரமத்திற்கு மிகவும் நொந்து அநுதபித்து, பிறகு தாம் எழுதி வெளியிட்ட தேசிக சரித்திரத்தில் (பக்கம் 137ல்) அந்தக் கதை தப்புக்கதை தான் என்று எழுதி முடித்திட்டார். இப்படியன்றோ பிராமாணிகத்வம் விளங்கவேணும்.

(4) ஆறாயிரப்படிக்குப் பின் தோன்றிய பல வியாக்கியானங்களிலுள்ள தோஷங்களைக் கணிசித்து அவற்றையெல்லாங் களைந்து தேசிகர் நிகம பரிமளமென்று ஒரு வியாக்கியானமிட்டாராம் திருவாய்மொழிக்கு. அதற்கு எழுபத்து நாலாயிரப்படியென்று பெயராம். அது வெகு அழகிய வியாக்கியானமாம். அதைத் தேசிகர் தமது குமாரர்க்கு மாத்திரம் காலக்ஷேபம் சாதித்தாராம்—இப்படியொரு ஆகாசப்பந்தல் போடுகிறார் அட்வகேட்.

ஆறாயிரப்படிக்குப் பின்புள்ள வியாக்கியானங்களாவன — நஞ்சீயரருளிய ஒன்பதினாயிரப்படி, பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த இருபத்துநாலாயிரப்படி, வடக்குத் திருவீதிப்பிள்ளை யருளிச்செய்த ஈடு முப்பத்தாறாயிரப்படி, வாதிகேஸரி

ஜீயர் பணித்த பன்னீராயிரப்படி ஆக இவையேயாம். இவற்றுள் பன்னீராயிரப்படி தேசிகர் காலத்தில் தோன்றியதா இல்லையா என்பதில் விவாதமுள்ளது. ஈடு முப்பத்தாறுயிரப்படி தேசிகர் காலத்தில் பிரசாரத்திலிருந்ததன்று. அதிலுள்ள குணமோ தோஷமோ தேசிகருக்குத் தெரிய ப்ரஸக்தியில்லை. ஒன்பதினுயிரப் படியும் விசேஷ பிரசாரத்திலில்லை. பெரியவாச்சான்பிள்ளை யருளிய இருபத்து நாலாயிரப்படியொன்றே தேசிகர் காலத்தில் காலக்ஷேப ப்ரசாரத்திலிருந்தது. அதில் தேசிகர் என்ன தோஷங்கள் கண்டார்? என்ன என்ன களைந்தார்? என் பதை இவர் நிரூபிக்கவேணும். அந்த நிகம பரிமள மென்கிற நூல் உண்டோ என்று கேட்டால், 'ஐயோ! அது அன்றைக்கே போய்விட்டதே' என்று கண் ணீரைச் சொரிந்து அழுகிறுர்கள். தேசிகர் இயற்றிய க்ரந்தங்களையெல்லாம் ஒன்றுவிடாமல் ஜாபிதா எடுத்து ச்லோகமாக்கி யிருக்கிறவர்களின் நூலில் ஷ்டி க்ரந்த நாமத்தின் நாற்றமாவது உண்டோவென்று பார்க்கலாமே. பந்தப்பா கழற்பா அம்மானைப்பா ஊசற்பா ஏசற்பா என்கிற பிரபந்தங்களைத் தேசிகர் பணித்திருந்தாரென்றும் அவை முன்னமே லோபித்துவிட்டனவென்றும் சொல்லுவதுண்டு. அவற்றின் பெயர்களையும் விடாது கூறியிருக்கின்றவர்கள் இந்த நிகம பரிமளத்தின் நாமத்தை ஏன் தொடவுமில்லை? ஆசார்ய சம்புவிலா வது தொட்டதுண்டோ?

இப்படியொரு வியாக்கியானமெழுத தேசிகருக்கு சக்தியில்லையென்று யாரும் சொல்லார். எழுபத்துநாலாயிரமன்று, எழுபத்துநாலு லக்ஷப்படி, எழுபத்துநாலு கோடிப்படியும் ஒரு நொடிப்பொழுதில் ஸ்ருஷ்டிக்கவல்லவரே. ஆனுல் இப்பெயர் பூண்டவொரு க்ரந்தம் தேசிகர் பணித்ததாக ப்ராமாணிக வைபவ நூல்களில் காண் பதுண்டா? என்பதே விசாரம். அவ்வளவு பெரிய க்ரந்தம் எதனுல் லோபித்து விட்டது? அந்தோ! வெட்கமற்ற பேச்சை வெளியிடவுந் தோன்றுகிறதே!

தேசிகர், பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளை உச்சி மேல் வைத்து மெச்சுபவரா? அல்லது அவற்றில் தோஷங்கண்டு தூஷிப்பவரா? என்பதை முக்கியமாக ஆராய்வோம். தேசிகர் காலக்ஷேபம் செய்த பகவத்விஷய க்ரந்தம் எது? ஆறுயிரப்படியா? இருபத்துநாலாயிரப்படியா? என்பதையும் ஆராய்வோம். நிஷ்பக்ஷபாதமாக மத்யஸ்த த்ருஷ்டியுடன் பார்க்கவேணும்.

திருவாய்மொழி முதற்பத்தில் எட்டாந் திருவாய்மொழியாகிய *ஓடும்புள் ளேறியில் எம்பெருமானுடைய திவ்யைச்வர்யம் சொல்லுகிறதாக ஆறுயிரப்படியில் பிள்ளான் அருளிச்செய்திருக்கிறுர். பெரியவாச்சான்பிள்ளையும் வடக்குத் திருவீதிப் பிள்ளையும் அதைப் பக்ஷாந்தரமாக்கி "இத்திருவாய்மொழியில் எம்பெருமானு டைய ஆர்ஜவ குணஞ் சொல்லுகிறது" என்று அருளிச் செய்தார்கள். தேசிகர் இங்கு ஆறுயிரப்படி ரீதியில் கண் செலுத்தாமல் நம்பிள்ளை திருவடிகள் நிஷ்கர் ஷித்தபடியையே ஆதரித்து "நிருபதிம்ருஜுதாம் நீரவர்ணே ஜகாத" என்றும் "ப்ரக்ருதிருஜுதயா" என்றும் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியிலும், "ஸுசீலம் ஸ்வாராதம் ஸரஸபஜநம் ஸ்வார்ஜவகுணம்" என்று த்ரமிடோப நிஷத் ஸாரத்திலும் ச்லோகமிட்டு அந்தப் பதிகத்திற்கு ஆர்ஜவகுணமே ப்ரதி

பாத்யமென்னுமிடத்தைக் கல்வெட்டாக்கினர். ஆர்ஜவ குணமென்கிற ப்ரஸ்தாவமே ஆறுயிரப்படியில் கிடையாது. நம்பிள்ளை திருவடிகளின் வியாக்கியானங்களை ஸேவியாமல் தேசிகர் அதை எங்ஙனம் க்ரஹித்தார்? கூறுமின்.

இங்கே பரகாலஸ்வாமி பதினெண்ணாயிரப்படியில், தேசிகர் இப்படி ஆறுயிரப்படி வழியைவிட்டு நம்பிள்ளை நெறியை ஆதரித்துவிட்டாரே யென்கிற திருவயிற்றெரிச்சலினல் தேசிகரை சபிக்கமாட்டாமல் நம்பிள்ளையை நிந்திக்கிறார். அது கிடக்கட்டும். இங்கே தேசிகர் யாருடைய திருவடிகளைச் சரணம் பற்றியிருக்கிறாரென்பதை பிராமாணிகர்கள் ஆகாச தாண்டவஞ் செய்யாமல் ஆர்ஜவத்துடன் அறுதியிடவேணும். 'பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தை தேசிகர் காலக்ஷேபமாக ஸேவிக்கவில்லை, தாமே பார்த்துக்கொண்டார்' என்றே சொல்லுங்கள். ஸம்மதமே. தேசிகருக்கு கௌரவ ப்ரதிபத்தி எந்த வியாக்கியானத்திலே? என்பதுதான் கேள்வி. பிள்ளான் வழியைப் புறக்கணித்தாகிலும் நம்பிள்ளை நெறியையே நாடுகின்றார் தேசிகர் என்பதை யாரும் மறுக்கவும் அசைக்கவும் முடியாதன்றே.

இஃது ஓரிடமேயன்று. இன்னமும் காட்டுகின்றேம். அதே திருவாய்மொழி முதற்பத்தில் பத்தாவது பதிகமாகிய *பொருமாநீள் படையின் ப்ரமேயத்தைப் பிள்ளான் ஸாதாரணமாக நிர்வஹித்தார். அதாவது, "இப்படி எம்பெருமான் தம்மோடே கலந்த கலவியால் தமக்குப் பிறந்த நிரவதிகமான நிர்வ்ருதியாலே அக்கலவியைப் பேசுகிறார்" என்று அவதாரிகையிட்டருளினர். இப்பதிகத்தில் "ஓர் எண் தானுமின்றியே வந்து இயலுமாறு" என்ற பாசுரத்தின் ஸ்வாரஸ்யத்தை நோக்கி நிர்ஹேதுக விஷயீகார பரமாகவே நம்பிள்ளை திருவடிகளின் வியாக்கியானங்களுள்ளன. பிள்ளான் இந்த வழியிற் செல்லவில்லை. ஆனாலும் தேசிகர் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் "அவ்யாஜோதாரபாவாத்" என்று நிர்ஹேதுக விஷயீகார நிர்வாஹந்தன்னையே கைக்கொண்டார். பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தை ஸேவியாமல் தேசிகர் இங்ஙனம் பணிக்க வழியுண்டோ? பிள்ளானுடைய ஆறுயிரப்படியை உபேக்ஷித்தன்றே பெரிய வாச்சான் பிள்ளை வழியைத் தழுவுகிறார் தேசிகர். ரஹஸ்யத்ரய ஸாராதிகளில் பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்திகளை அபியுக்த ஸூக்தியாக தேசிகர் ஸ்பஷ்டமாகவே உதாஹரித்திருப்பதையுங் காணலாம்.

ஆழ்வார்க்கு ஸ்த்ரீபாவனை வந்தபடி என்? என்கிற ப்ரஸங்கத்திலே பெரிய வாச்சான்பிள்ளை "பாஞ்சால்யா: பத்மபத்ராக்ஷ்யா: ஸ்நாயந்த்யா ஜகநம் கநம், யாஸ் ஸ்த்ரியோ த்ருஷ்டவத்யஸ் தா: பும்பாவம் மநஸா யயு:" என்கிற மஹாபாரத ச்லோகத்தை யெடுத்துக்காட்டியுள்ளார்; அதையே இவர் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் "பாஞ்சாலீகாத்ர சோபாஹ்ருதநயந வதூவர்க்கபும்பாவ நீத்யா" என்று ச்லோகமாக்கினர். அந்த தாத்பர்ய ரத்நாவலி முழுதும் பெரிய வாச்சான்பிள்ளை திவ்யஸூக்திமயம் என்பதும், ஆறுயிரப்படியின் ஸ்பர்சலேசமும் அதில் கிடையாதென்பதும் பலகால் பரக்க நிரூபிதம்.

தேசிக க்ரந்தங்களில் ஒன்றிலும் ஆறுயிரப்படியென்கிற பேச்சே கிடையாது; திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்றோ, பிள்ளான் என்றோ நாமநிர்தேச மாத்ர மும் கிடையாது. ஸ்ரீ வசனபூஷணத்தில் இந்தத் திருநாமங்களையிட்டு உதாஹரித் தருளின அர்த்த விசேஷங்களைக் கண்டிப்பதற்காக ரஹஸ்யத்ரயஸாரத்தில் உபா தானம் பண்ணினவித்தனை யொழிய வேறு அணுவளவுங் கிடையாது. திருவாய் மொழிக்கு ஆறுயிரப்படி யென்றொரு வியாக்கியான மிருந்ததாகவே தேசிகன் அறிந் திலர் என்று சபதமிட்டுக் கூறுவேன். "மத்யோபஹத பாத்ரஸ்த தீர்த்தத்ருஷ் டாந்தவர்ணநம்" என்கிற காரிகையினால் திருக்குருகைப்பிரான் பிள்ளான் ஸ்ரீ ஸூக்தியையே கண்டித்திருக்கிறாரென்பதை ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகியசிங்கர் சிலா சாஸனமிட்டு வைத்தார்.

எம்பெருமானார் இன்னின்ன ஆசார்யர் பக்கலிலே இன்னின்ன க்ரந்தங்களை யதிகரித்தாரென்பது நம்பிள்ளையின் திருவடியான பின்பழகிய பெருமாள் ஜீயரால் பொறித்து வைக்கப்பட்டுள்ளது. அந்த பங்க்திகளே அப்படியே ஸம்ப்ரதாய பரிசுத்தியிலும் குருபரம்பரா ஸாரத்திலும் தேசிகனால் எழுதப்பட்டுள்ளன. உபய ஸம்ப்ரதாய க்ரந்தங்களையும் பரிச்ரமப்பட்டு பரிசிலிப்பவர்களுக்கு இவையெல்லாம் எளிதாகத் தெரியவரும்.

எம்பெருமானார் திருமாலையாண்டான் பக்கலில் திருவாய்மொழிப் பொருள் கேட்டுவருகையில் சிற்சிலவிடங்களில் ஸ்வாமி "இதற்கு இங்ஙனே பொருளாகலாமே" என்று பணிக்க, 'இது ஆளவந்தாரருளிச்செய்ய நான் கேட்டதில்லை' என்று ஆண்டான் பணிக்க, ஒரு ஸமயம் ஸ்வாமி ஸாதித்ததாவது "ஆளவந்தாருக்கு நான் ஏகலவ்யன் காணும்" என்று. இதைத் தென்னாசார்ய க்ரந்தங்களில் கண்ட அபர தேசிகர் "பாஷ்யகாரர் தாமொரு அர்த்தம் பணித்ததுமில்லை, ஆளவந்தாருக்கு நான் ஏகலவ்யனென்று சொன்னதுமில்லை, இதெல்லாம் தப்பான ஐதிஹ்யம்" என்று எழுதிவைத்திருக்கிறார். கீதாபாஷ்யோபக்ரமத்தில் ஸ்ரீபாஷ்யகார ரருளிச்செய்த "யத்பதாம் போருஹத்யாந வித்வஸ்தாசேஷ கல்மஷ......யாமுநேயம் நமாமி தம்" என்கிற ஆளவந்தார் விஷயமான ஸ்துதி பத்யத்திற்கு வியாக்கியான மிடாநின்ற தேசிகன் "த்ரோணாசார்யஸ்ய ஏகலவ்ய இவ யாமுநாசார்யஸ்ய அஹம்" என்று பணித்துள்ள ஸ்ரீஸூக்தியை நாம் எடுத்துக்காட்டின பின்பு ஆகாசத்தை நோக்கி னார். அது கிடக்கட்டும். "ஏகலவ்ய இவாஹம்" என்று ஸ்வாமி ஸாதித்ததாக தேசிகன் எழுதியிருப்பது பின்பழகிய பெருமாள் ஜீயர் அருளிச்செய்திருப்பதை ஸேவித்தே யென்றுணர்க.

பகவத்கீதையில் *(4-11)* "யே யதா மாம் ப்ரபத்யந்தே தாந் ததைவ பஜாம் யஹம்" என்ற ச்லோகத்தை அர்ச்சாவதாரத்திற்குப் பிரமாணமாக நம்பிள்ளை உபந்யஸித்தருளினார். இது திருவாய்மொழி *(8—1—4)* *உமருகந்துகந்த வுருவம் நின்னுருவமாகி* என்றவிடத்து ஈட்டிலும் இருபத்துநாலாயிரப்படியிலும் வ்யக்தம். இது கீதாபாஷ்யத்தில் இல்லை. வேறு எங்குமில்லை. அவ்விடத்து தாத்பர்ய சந்த்ரி கையில் இந்த நிர்வாஹம் எடுத்தாளப்பட்டுள்ளது. இப்படி இருபது இடங்களை நமது நூல்களில் விரிவுக்கு அஞ்சாமல் எடுத்துக்காட்டியிருக்கிறோம்.

"பெரியவாச்சான்பிள்ளை ஸூக்தியை தேசிகன் கண்டித்திருக்கிறார்" என்ப
தைக் காட்டுகிறேனென்கிறாரொரு பண்டிதர். ஸ்ரீபாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்தி
களையும் கண்டித்திருக்கிற புடையிலே, (கிம் பஹுநா?) ஸ்வோக்திகளையும் பஹுச:
கண்டித்திருக்கிற முறையிலே அது ப்ராப்தமானால் அதில் வியப்புண்டோ? "தேசி
கன் கண்டித்த அர்த்தங்கள் எவையெவை?" என்றோ, "தேசிகனால் கண்டிக்கப்
பட்ட ஆசாரியர்கள் யார் யார்?" என்றோ மகுடமிட்டு அவருடைய ஸம்ஸ்க்ருத
த்ராவிட க்ரந்தங்களையெல்லாம் பரிசிலித்து ஒரு ப்ராமாணிக பண்டிதர் எழுதப்
புக்கால் மருமம் வெளிவரும்.

"ச்ருதப்ரகாசிகையிலுள்ள தோஷங்களைக் களைந்து தத்வடீகை இயற்றினார்.
ஸ்ரீ பாஷ்யதீபஸாரங்களிலுள்ள அபார்த்தங்களைக் கண்டித்து அதிகரண ஸாராவளி
பணித்தார். கீதாபாஷ்யத்திலுள்ள தவறான பொருள்களைப் போக்குவதற்காகவே
தாத்பர்ய சந்த்ரிகை பணித்தார்; வேதார்த்த ஸங்க்ரஹத்திலுள்ள விபரீதார்த்தங்
களை விலக்குவதற்காகவே தத்வ முக்தாகலாப ஸர்வார்த்த ஸித்திகளை யெழுதினார்"
என்றிப்படி இவ்வட்வகேட் எழுதிக்கொண்டே போகலாம். இது ஸத்யம் என்றே
உலகம் கொள்ளும். ஏனென்றால், இதையெல்லாம் மூதலிக்கப் பர்யாப்தமான
விஷயங்கள் அவ்வவற்றில் ஸுபிக்ஷமாக வுள்ளன. புதிதாக மூதலிக்கவேண்டியது
மில்லை.

ஆக இவ்வகைகளாலே, தேசிகர் திவ்யப்ரபந்தார்த்த விஷயத்தில் பெரிய
வாச்சான்பிள்ளை'வியாக்கியானத்தைச் சேமநிதியாகக் கொண்டிருந்தமை திடமா
கத் தேறுதலால் நிகம பரிமள விச்வாமித்ர ஸ்ருஷ்டிக்கு நிதாநலேசமுமில்லை
யென்பது தேறிநிற்கும். பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானங்களில்
தேசிகர் தோஷங்கள் கண்டாரென்பது மிகமிக ஸாஹஸம், மிகப் பெரிய அஸம்
பத்தம் தேசிகர் ஸர்வார்த்தஸித்தியில் "மரீசிகாம்பஸி ஸ்நாத: கபுஷ்பக்ருதசேகர:,
ஏஷ வந்த்யாஸுதோ யாதி சசச்ருங்கதனுர்த்தர:" என்றொரு ச்லோகம் காட்டு
கிறார். அது இந்த அட்வகேட் திறத்திலே மிகப் பொருத்தமுடைத்து. நிகமபரிமள
மென்கிற சுவடியைக் கையில் வைத்துக்கொண்டு பேசினாலாவது ஏற்கும். அதுவும்
அன்றே தொலைந்துபோயிற்றென்று அழுதுகொண்டு, அது வெகு அழகாயிருந்த
தென்று இவர் எழுதுவது ஒரு கதையை நினைப்பூட்டுகின்றது:—

"ஒரு தீர்க்க ப்ரஹ்மசாரி நெடுநாளாகத் தனக்கு விவாஹமாகாதிருந்த அவ
மானத்தைத் தீர்த்துக்கொள்ளவேண்டி உப்பிலியப்பன் ஸன்னிதிக்குச் சென்று,
நாளது தைமீ 5வ தனக்கு விவாஹம் நடத்த நிச்சயித்திருப்பதாக ஒரு பெண்
பெயரைக் குறிப்பிட்டு சுப முஹூர்த்த பத்ரிகை அச்சிட்டு பந்துமித்திரர்களுக்கு
அது தைமீ 6வக்குப் பிறகு சேரும்படியாக அனுப்பிவிட்டு அங்குமிங்கும் சிலநாள்
திரிந்திருந்து பிறகு ஒருநாளில் அந்தப்பெண் ஆசாரியன் திருவடியடைந்திட்டதாக
அனைவர்க்கும் மரணக்கடிதங்களனுப்பிவிட்டு 20 நாள் பொறுத்து வீடுவந்து சேர்ந்து
'ஐயோ! அவளுடைய முகம் எவ்வளவு அழகு தெரியுமா? கூந்தல் என்ன அழகு
தெரியுமா! குரல் என்ன கம்பீரந் தெரியுமா?' என்று பலபலவுஞ் சொல்லிப்

புரண்டழுது போதைப் போக்கினனும்''. இக்கதைதான் நினைவுக்கு வருகின்றது. முநிவாஹந போகமென்கிற அமலனுதிபிரான் வியாக்கியான மவதரித்திருக்குமழகைப் பார்ப்பதொன்றே போதுமே.

திருவாய்மொழி வியாக்கியானங்களின் தூஷண புரஸ்ஸரமாக நிகமபரிமளத்தின் ப்ரஸ்தாவத்தை அட்வகேட் எடுத்தது எதற்காகவென்னில், ராமாநுஜதயாபாத்ரத் தனியன் தோன்றிய காரணத்தை யெழுதப்புகுந்து சில அஸங்கதங்களை யெழுதிவருமடைவிலேயாயிற்று. 200 வருஷங்களுக்கிப்பால் கோவில் சண்டைகளுக்காகவே தோன்றிய ராமாநுஜதயாபாத்ரத் தனியன் தேசிகர் காலத்திலேயே தோன்றியதென்று ஒரு பொய்யை ஸ்தாபிக்க எத்தனை பொய்களைக் கல்பனை செய்ய வேண்டியதாகிறதென்பதை விவேகிகள் நோக்கவேணும். தேசிகருக்கு *ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய:* என்கிற தனியன் ஏற்கெனவே தோன்றி உலகமெங்கும் பரவி விளங்கும் போது இந்தத் தனியன் தோன்ற அவகாசமேது? என்கிற சங்கைக்கு ஸமாதான மெழுதுகிருர் பாருங்கள்;—தேசிகர் நிகமபரிமளத்தை இயற்றித் தம் குமாரர்க்கு மாத்திரம் முன்பே ப்ரவசநம் செய்திருந்தாராம். அதை ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமி தேசிகர் திருக்குமாரரிடம் அதிகரிக்க ஆரம்பித்தாராம். அப்போது இதற்கு *ஸ்ரீமாந் வேங்கட தனியன் தகாதென்றும் வேறு தனியன் இருக்க வேணுமென்றும் தோன்றி *ராமாநுஜ தயாபாத்ரம்* என்கிற தனியனை அநுஸந்தித்தாராம். இதை தேசிகர் கேள்விப்பட்டு இந்தத் தனியன் வெகு ஆச்சரியமாக அமைந்திருக்கிறதென்று தலைதுலுக்கிக் கொண்டாடி, பகவத்விஷய காலக்ஷேபத்திற்கு இந்தத் தனியனும் மற்ற காலக்ஷேபங்களுக்கு *ஸ்ரீமாந் வேங்கட தனியனும் வைத்துக்கொள்ளுங்கள் என்று நியமித்தாராம். ஸகல திவ்யதேசங்களிலும், அதிலும் மிகமுக்கியமாக ஸ்ரீரங்கம் திருமலை காஞ்சி க்ஷேத்ரங்களில் இந்த ராமாநுஜ தயாபாத்ரத் தனியனே விலைசெல்ல வேண்டியிருந்தும் கலிகோலாஹலத்தால் விபரீதாசரணம் நேர்ந்து இத்தனியன் செல்லாத காசாக ஆய்விட்டதாம்.........இப்படியெல்லாம் எழுதிவைத்திருக்கிருர். ஏற்கனவே ப்ரஸக்திவசாத் அவதரித்து உலகம் நிறைந்த புகழ்படைத்துள்ள (1) ராமாநுஜதயாபாத்ரதத்வம் (2) பாத்ரதத்வ விஜயத்வஜம் (3) பாத்ரதத்வபரமார்த்தம் என்கிற மூன்று ஆராய்ச்சி நூல்களிற் கண்ட விஷயங்களுள் ஒன்றுக்குக் கூட வாய்திறக்க முடியாதபடி அமுங்கியிருந்தவிவர்கள், இப்போது அவையெல்லாம் மறந்தோ மறைந்தோ போயிருக்குமென்றெண்ணி அந்தோ! உயிரிழந்த கதைகளுக்கு உயிரூட்டப் பாரிப்பது என்ன விசித்திரம்! அந்தப் பாரதங்களை மறுபடியும் இப்போது விவரித்து நூலைப்பெருக்க விரும்புகின்றிலோம். மூலமான பொய்யை யறுத்தொழித்தால் மற்ற கிளைப் பொய்களெல்லாம் தன்னடையே அறுக்கப்பட்டனவாகுமாதலால், "ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமி பகவத் விஷய காலக்ஷேபத்தை தேசிகரிடம் செய்யவில்லை, அவரது திருக்குமாரரிடத்தே செய்தார்'' என்கிற முதற் புளுகை மாத்திரம் இந்த அசைக்கமுடியாத பிரமாணத்தினுல் அறுத்துத் தள்ளுகிறோம். கேண்மின், காண்மின்:-

சண்டமாருதம் தொட்டயாசார் ஸ்வாமி ஸாதித்ததென்று இவர்கள் மிக மிகக் கொண்டாடுகிற தேசிகவைபவ ப்ரகாசிகா ஸ்தோத்ரத்தில் ஒரு சுலோகம்—

"ப்ரஹ்மதந்த்ரசதுராய யோகிநே ஸர்வதந்த்ரசதுரோ குருத்தம:,
வேதமௌலியுகலம் ஹ்யுபாதிசத் வாதிஸிம்ஹமநகம் தமாச்ரயே."

என்பது. இதனால் ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமிக்கு பகவத்விஷய காலக்ஷேபமும் தேசிகரிடத்திலேயே ஆயிற்றென்று ஸுஸ்பஷ்டமாக விளங்கும்போது இதற்கு மாறாகக் கல்பிக்கும் ஐதிஹ்யமும் தந்மூலமாகக் கல்பிக்கப்படுகிற ராமாநுஜதயா பாத்ரத் தோற்றமும் முழுப்பொய்யென்பது குன்றிவிட்ட விளக்காகி நின்றது.

ஒரு விநோதம் காண்மின். தேசிகருடைய திருவவதார காலமே இன்னமும் நிச்சயிக்கப்படாமல் வித்வான்களின் விவாதத்தில் விழுந்திருக்கிறது. ஒரு சாரார் சுக்ல வருஷத்தில் அவதாரமென்கின்றனர்; மற்றொரு சாரார் விபவ வருஷத்திலென்கின்றனர். இதுவே இப்படி யிருக்கும்போது ராமாநுஜ தயாபாத்ரத்தனியனுக்கு வருஷம் மாதம் தேதி நக்ஷத்ரம் நாள் மணி நிமிஷம் முதலாக எல்லாம் ஒழுங்காக எழுதப்பட்டிருக்கின்றனவாய் வெளிவருகின்றதே, இஃதொன்றுக்குத் தான் சிரித்து மாளவில்லை. ஸ்ரீ பாஷ்யாதிகளும் தேசிக க்ரந்தங்களும் ஒவ்வொன்றும் அவதரித்த காலம் இன்னதென்று யார்க்குந் தெரியாது; தெரிந்து கொள்ள வழியுமில்லை. எங்கும் விலை செல்லாத வொரு அநுஷ்டுப்புக்கு லக்ந ஹோரைகள் முதற்கொண்டு வெளிவருகின்றதென்றால் இந்த ஜாதகம் எதற்காகத் தோன்றியதென்பதைக் கண்டுபிடிக்க நிபுணர்கள் இல்லையா?

இந்த ப்ரகரணத்தில் முடிவாக வொரு வார்த்தை யெழுதுகிறோம். தேசிகரால் திவ்யப்ரபந்தங்களுக்கும் திவ்யதேசங்களுக்கும் அபரிமிதமான [விசேஷோபகாரங்கள் விளைந்ததாகவே யிருக்கட்டும். அதற்கும் தனியனநுஸந்தானத்திற்கும் என்ன ஸம்பந்தம்? உண்மையில் திவ்யப்ரபந்த விஷயத்தில் ஸ்ரீமந் நாதமுனிகளைக் காட்டிலுமா வேறொரு உபகாரகர் தேறப்போகிறார்! "தாளம் வழங்கித் தமிழ் மறை யின்னிசை தந்த வள்ளல்" என்று தேசிகர்தாமும் கொண்டாட நின்ற அந்த மஹாசார்யருடைய தனியன் ஸன்னிதிகளில் எங்கேயாவது (விடுதித்துண்டு வாக்யமாகவாவது) அநுஸந்தானம் பெற்று வருகிறதோ? அஃதில்லையேயென்று பரிதபிப்பார் ஆரேனுமுண்டோ? இப்படியிருக்க, தேசிகர்தனியன் கோவில்களில் விலை செல்லவில்லையே யென்கிற வயிறு பிடியும் வசை மொழிகளும் எதற்காக?

—ஓர் முக்கியமான விஷயம்—

நெடுநாளாகப் பலருடைய உள்ளத்திலிருந்ததொரு மஹத்தான ஸந்தேஹமும் ஸமீப காலத்தில் தீர்ந்திருக்கிற அதிசயத்தையும் இங்கு ப்ரஸங்காத் தெரிவிப்போம். அனேக திவ்ய தேசங்களில் வேதாந்தாசார்யருடைய விக்ரஹப்ரதிஷ்டை நடந்திருக்கிறதே; இது எப்போது நடந்தது? எப்படி நடந்தது? எதற்காக நடந்தது? என்றிப்படி பலரும் பலபடியாக விதர்க்கங்கள் செய்து கொண்டிருந்தார்கள். ஒரு விதமான நிர்ணயமும் நெடுநாளாகவே ஏற்படாமலிருந்தது. இப்போதே சில வருடங்களுக்கு முன்பாகவே மைஸூர் மகாநகரத்தில் ஸ்ரீமத் பரகால ஸ்வாமியின் வைபவம் கன்னட பாஷையில் விபுலமாக அச்சாகி வந்ததில் இந்த ஸந்தேஹம் தீரப்பெற்றது. அங்கு பத்தெட்டு பட்டங்களுக்கு முன்பு பெரிய பரகால

ஸ்வாமி யென்ருெரு மடாதிபதி மஹாவ்யாபகராக எழுந்தருளியிருந்தாராம். அவர் தேசிக பக்தி தலையெடுத்து தென்னாட்டில் ஸகல திவ்ய தேசங்களிலும் தேசிக விக்ர ஹத்தை ப்ரதிஷ்டிப்பிக்க விரும்பினாராம். அவர்க்கு அபரிமிதமான பொருளுப பத்தியிருந்ததனால் அப்படியே செய்து முடித்தாராம். நூற்றுக்கணக்கான தேசிக விக்ரஹங்களை ஏறியருளப்பண்ணி வண்டிகளில் ஏற்றிக்கொண்டு அந்த ஸ்வாமி தேசமெங்கும் ஸஞ்சரித்து ஆங்காங்கு திருப்ரதிஷ்டை செய்வித்தருளினாராம். தனி யன் பிரசாரத்திற்கும் பெருமுயற்சி செய்த மஹாஸ்வாமி அவரேயாவர். இவ் வுண்மை உலகுக்குத் தெரிய வேண்டியது மிக அவசியம்.

இப்படி ஆதியோடந்தமாக அட்வகேட் எழுதினதத்தனையும் அஸ்தாநே பூர்வாசார்ய தூஷண ராசியாகவும் உண்மை விஷயமொன்று கூட இல்லாததாகவும் துராக்ரஹைகவிஜ்ரும்பிதமாகவுமிருப்பதால் இதனால் லோகக்ஷேபம் விளையாமைக் காக இவ்வளவும் பரமார்த்தமுணர்த்தினோம்.

இவ்வளவும் 1944ல் வெளியிட்டது. இனி இப்போதெழுதுவது.

1944ல் தேசிகப் பிரபந்தவுரை யச்சிட்ட ஸ்ரீராமதேசிகரே 1960ல் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் மூலமச்சிட்டார். இரண்டு பாகமாக வெளியிட்டவதின் முதற் பாகத்தில் "தேசிக சரித்ர ஸங்க்ரஹம்" என்று மகுடமிட்டு எழுதத் தொடங் குகையில் "ஸ்ரீ தேசிக சரித்ரம் பல்வேறு பதிப்புக்களில் வெளிவந்துள்ளது. அவற் றில் நிகழ்ச்சி முறை, நடந்த இடம், காலம் முதலியவற்றில் சிறிது வேறுபாடு காணப்படுவது உண்மையே" என்றெழுதிவிட்டு, அட்வகேட்டின் கட்டுரையில் அஸம்பத்தமென்று நாமெடுத்துக் கழித்தவற்றையெல்லாம் அறவே விலக்கியிருக்கிரு ரென்பதைக் கண்டுகொள்ளவேணும். இதனால் அவர் தமது அநுதாபத்தைக் காட் டிக் கொண்டதை நாம் அப்போதே ஸ்ரீராமாநுஜன் மூலம் வெளியிட்டிருக்கிறோம்.

இவ்வட்வகேட்டின் வினைகளில் ஸுக்ருதலவலேசகணிகை யுள்ளதாகத் தெரியவருகின்றது; எதனாலென்னில்; இவர்தம்முடைய அபசாரங்களுக்கு மண வாளமாமுனிகளை லக்ஷ்யமாக்கிக் கொள்ளவில்லையென்பதனால். உண்மையில் இஃதொன்று இவருடைய தீவினைகளையெல்லாம் தீயினில் தூசாக்கவற்று. தத்வத் ரயத்தில் "கர்த்ருத்வந்தான் ஈச்வராதீனம்" என்கிற சூர்ணிகைக்கு மாமுனிகள் இட்டருளின விபுலவிசதவியாக்கியானத்தையும் "க்ஷேத்ரஜ்ஞாநாம் ஸமாநாம்" என்கிற அதிகரணஸாராவளி ச்லோகார்த்தத்தையும் ஒரு ஸதாசார்யர் பக்கலிலே இவர் கேட்கப்பெற்றாராகில் இருளும் மருளும் மயக்கும் துயக்கும் தீரப்பெறுவர்.

இரண்டு தனியன்கள் அவதரிக்கும் பெருமை நம் தேசிகவள்ளலுக்கே உள்ள தென்று அடிக்கடி எழுதுகிறார். இரண்டென்ன? மூன்று நான்கு ஐந்தாறு பதினாயிரமு மாகலாம். நீதி மன்றங்களில் எங்கும் விலைசெல்லமாட்டாதவொரு முப்பத்திரண் டெழுத்துக்கு மண்டபம் கட்டியும் மஹோத்ஸவம் பண்ணியும் போருகிற மேதாவி களின் மேதாவிலாஸத்திற்குக் கண்ணெச்சில் படாமைக்கு எத்தனைமணங்கு கருப் பூரம் கொளுத்தினாலும் போதாது!

"தேசிகனென்கிற சொல் ஈரரசுபடாமல்" என்றும் பலகால் எழுதுகிறார். இதுவும் பொருளற்ற பேச்சு. நிகமாந்த குரு திருவவதரிப்பதற்கு நெடுங்காலத்திற்கு முன்னமே திருவவதரித்த திருவாசிரியத் தனியனில் "தேசிகனைப் பராங்குசனைத் திகழ்வகுளத்தாரானை" என்று விளங்காநின்றது. சைவசமயத்தில் பண்டாரச்சாமிகளை தேசிகரென்றே வழங்கிவருகிறார்கள். ஸ்ரீமான் வேங்கடதனியனில் வேதாந்தாசார்ய நாமமே பொலிந்தது. ஆசார்யசம்பூகாரர் வேதாந்தாசார்ய விஜயமென்றே நாமகரணம் செய்தார். ஸ்வாமி விருது பெற்றதும் வேதாந்தாசார்யரென்றே. "வேதாந்தாசார்ய ஸம்ஜ்ஞாம் அவஹிதபஹுவித்ஸார்த்தமந்வர்த்தயாமி" என்று பணிக்கவுமாயிற்று. ஆர்ய-ஆசார்ய-குரு-தேசிக சப்தங்கள் பர்யாயங்களாகையாலே திருநாமத்தோடே இப்பதங்களில் எதையும் சேர்த்து ச்லோகமிடுவர்கள். "அஸ்மத் குருப்யோ நம:, அஸ்மத் பரம குருப்யோ நம:, அஸ்மத் ஸர்வ குருப்யோ நம:" என்ற வாக்யத்ரயத்திற்கு ச்லோகமிடாநின்ற முன்னோர்கள் "அஸ்மத்தேசிகம்" என்றே தொடங்கினர். ஸ்வாமிதாமும் நியாஸதிலகத்திலே ஸ்வாசார்யரைக் குறிக்குமிடத்து "தேசிகோ மே தயாலு:" என்றார். குருபரம்பராஸாரத்தில், அநேக தேசிகாபதேசத்தாலே என்றது முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது. எறும்பியப்பா "தேசிகோ தேசிகாநாம்" என்றார் மாமுனிகளை. உபதேசரத்தின மாலை தேசிக மயமாகத் திருவவதரித்துள்ளது. புதுத் தெய்வங் கொண்டாடத் தொடங்கின புதுமையில் "ஏளியாச்சு, அமிசேச்சாச்சு" இத்யாதி பரிபாஷைகளைத் தொடங்கினவற்றில் இதுவுமொன்று.

கன்னட தேசத்தில் அச்சிட்டிருக்கிற தேசிக சரித்திர புத்தகமொன்றில் தேசிகனுக்கு தேவிமார் இருவரென்றும்; மூத்தமனைவிக்கு ஸந்தானமுண்டாகவில்லையென்று இளையதேவியை மணந்துகொண்டதாகவும், இவளிடத்தில் திருக்குமாரர் (நயனாராசாரியர்) திருவவதரித்தபின்பு மூத்த தேவியாருக்கு புதல்விகளிருவர் பிறந்ததாகவும், அவர்களின் ஸந்ததியார் கரூர், பவானி ப்ராந்தத்தில் விளங்கிவருவதாகவும் எழுதப்பட்டுள்ளதாகச் சொல்லிவருகிறார்கள். இது த்விதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வாமியெழுதிய வைபவத்தோடு சேராது. ஆனாலும் கன்னட நாட்டில் ப்ரஸித்தமாக வழங்கி வருகிறதாம். இவ்வட்வகேட் எழுதியுள்ள சரித்திரங்கள் அமெரிகா ஆஸ்ட்ரேலியா முதலிய த்வீபாந்தரங்களில் வழங்கிவரும் போலும்.

## உபஸம்ஹாரம்

இக்கட்டுரையின் மகுடத்தில் மூன்று வினாக்கள் கண்டீர்கள்; இந்த வாத விவாதங்கள் எப்போது தொடங்கியவை? எதனால் தொடங்கியவை? என்ற இரண்டு வினாக்களுக்கு விடையறிந்து கொண்டீர்கள். இனி 'இவை எப்போது முடிபவை?' என்கிற மூன்றாவது வினாவுக்கு விடை கேளீர்.

ப்ரஸக்தி ஏற்படாமல் நாமாக ஒரு மறுப்புநூலும் எழுதினதில்லை. திருக்குடந்தையிலிருந்த [சதஸம்வாதகர்த்தாவான] குரிச்சி கோபாலாசாரியர், காஞ்சியிலிருந்த சாமா திருமலைதாதாசாரியர், திருவயிந்திரபுரத்திலிருந்த சேட்லூர்

நரஸிம்ஹாசாரியர், ஸ்ரீரங்கத்திலிருந்த கீழச்சேரி ஸ்ரீநிவாஸாசாரியர் முதலானவர்கள் தென்னாசார்ய தூஷணையையே முக்கியலக்ஷ்யமாகக்கொண்டு எழுதி வெளியிட்ட நிந்தைச் சுவடிகளுக்கு மறுப்பாகவே நமது நூல்கள் தோன்றின. மாககாவியம் இரண்டாவது ஸர்க்கத்தில் "யே உதாஸதே, ப்ரக்ஷிப்யோதர்ச்சிஷம் கக்ஷே சேரதே தேபிமாருதம்" என்ற சுலோகம் விசேஷித்து எனது நினைவிலிருப்பதாம். எனது (மறுப்புரையான) எந்த நூலை யெடுத்துப் பார்த்தாலும் இது ஸமூலமே யொழிய நிர்மூலமன்று என்பது விளங்கியேதீரும். 'தானேயெழுதிய தன்சரிதை' என்கிற எனது புத்தகத்தில் இதையெல்லாம் வெகுவிரிவாக விளக்கியிருக்கிறேன். ப்ரதீப சலப ந்யாயேந பூதநாசகடவத்ஸகபித்தாதிகள் தாமாகவே வந்து மேல் விழுந்து மடிந்தவர்கள் கணக்கிலடங்கார்கள். இது நிற்க.

இதுகாறும் எந்தெந்த விஷயங்களைப் பற்றி வியாஸங்களும் நூல்களும் எழுதி வெளியிட்டிருக்கிறேனென்பது உலகமறிந்தது. பெரிய வித்வான்கள் ஆர்ஜவத்தோடு விடையளித்துத் தீரவேண்டிய விஷயங்கள் எவையெவை யென்பதை இரு வகுப்பிலும் வித்வான்களாயுள்ளவர்கள் நினைவில் கொண்டேயிருப்பார்கள். ஒரு நபரையும் தொடாமலும் உபாலம்பலவலேசமின்றியும் விடை கூறவல்லவர்கள் கூறி உலகை மகிழ்விக்கட்டும். அதைப்பற்றி இனி நாம் ஏது மெழுதோம். தென்னாசார்யர்களின் திவ்ய ஸூக்திகளில் விடை கூற வேண்டிய ஆக்ஷேபங்கள் ஏதேனும் ப்ரஸித்த வித்வான்கள் மூலமாகத் தோன்றினால் அவற்றுக்கு என்னுடைய ஸம்ஸ்க்ருத த்ராவிட நிபந்தங்களில் விடைகள் வெளிவந்தே யுள்ளனவென்று தத்வதர்சிகள் எடுத்துக் காட்டுவர்கள். புதிதாக விடைகள் அளிக்கவேண்டியிருந்தால் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபரான ஸ்ரீமதுபயவே. S. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் (அட்வகேட்) ஸ்வாமி தமது பத்ரிகையில் தெளிவுகாட்டுவாரென்பது திண்ணம்.

ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி:

## எச்சரிக்கை.

எவ்வளவு அரியபெரிய விஷயங்களையும் சில நாட்களில் மறப்பது மானிடரியற்கை. சில மாதங்கள் கடந்தால் அறவே மறந்துபோம். இதில் நாம் விளக்கிய விஷயங்கள் ஸ்ரீ வைஷ்ணவர்களால் வாழ்நாளுள்ளவரையில் மறக்கத்தக்கவையல்ல. ஆனாலும் சில நாட்களில் மறந்துபோம். எனது நண்பர்கள் இந்த ஸஞ்சிகையை அடிக்கடி யெடுத்து வாசித்துக்கொண்டிருப்பார்களென்று திடமாக நம்புகிறேன். இனி என்னிடமிருந்து உலகம் எதிர்பார்க்கக்கூடிய நூல்கள், நான்கு பாஷைகளிலும் லோகாபிராமமான வையேயாம். பகவத் ராமாநுஜ ஸித்தாந்தஸாரப் பொருள்களே. ஸ்ரீ லோகாசார்ய ஸித்தாந்தஸாரப் பொருள்களோ இதுவரை நம்மா லெழுதப்படாமல் இனி யெழுதப்படவேண்டியது ஏதுமில்லை யென்பதைத் துணிந்து தெரிவிக்கிறோம். ஒரு பாஷையிலல்ல, நான்கு பாஷைகளிலும். இதில் ஏதேனும் சேஷமிருந்தால் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகை சேஷபூரணம் செய்யுமென்பதை மீண்டும் தெரிவித்து நிற்கிறேன். ஸ்ரீமதுபயவே. (க்வாலியர்.) S. ஸத்யமூர்த்தி ஐயங்கார் ஸ்வாமியால் ஆங்கில பாஷையில் ஸத்ஸம்பிரதாயார்த்தங்கள் வெளிவரும்.

(சுலோகம்) பரிதாவி புரட்டாசி—திருவோண விழாமலர்.
இதுவென்றறிமின், கொண்மின் நித்யபாராயணத்திலே.

# யதார்த்த ராமாநுஜனென்பத்திரண்டு

இத்தலைப்புடன் வெளிவந்தவை முக்கூர் வித்வத்ஸதஸ்ஸில் பல பெரியார்களால் பரிசீலிக்கப்பட்டு "கோழி வெண்முட்டைக்கு என்செய்வதெந்தாய்! குறுந்தடி" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரம் காட்டியது மிகமிகப் பொருந்தும் என்று ஒவ்வொருவராலும் தலைதுலுக்கிக் கூறப்பட்டதென்று ஆப்தர்களறிவிக்க அறிந்தோம். யதார்த்த ராமாநுஜன்—2; ......3; ......4. என்று எவ்வளவும் வந்துகொண்டிருக்கட்டும். "ஸ ராமபாணபிஹதோ ப்ருசார்த்தச் சசால சாபஞ்ச முமோச வீர:" என்னும் நிலையான பின்பு "கச்சாநுஜாநாமி ரணார்திதஸ் த்வம்" என்று அருள்கூர்ந்து விடை தந்தபின்பும் விதி மாண்டு மீண்டும் போர்க்கு வந்த கணக்கிலே எத்தனை விசை வேணுமானாலும் வரலாமிவர். எவர்? ப்ரபூதமென்பது ஒருவர்க்கு ஸ்மாரகமானாப்போலே ஜடமதியென்பது எவர்க்கு ஸ்மாரகமோ அவர்.

எந்த விஷயம் எவ்வளவில் நிற்கிறது? திண்டுமிண்டாடி திக்குமுக்கலாடித் தடுமாறி நிற்பவர் தலைதூக்க வழி ஏது! என்று உண்மையறிந்து உரைக்கவல்ல விவேகிகள் இல்லாமற் போகவில்லையே. ஆறாயிரப்படியில் இல்லாத பங்க்திகளை இருப்பனவாக மருண்டு ஆரவாரம் செய்து இவர் பட்ட பரிபவம் ஏழேழ் பிறவிக்கும் மறையாதே. ஏழுலகத்தவர்க்கும் மறவாதே. "ஆம்ராந் ப்ருஷ்ட: கோவிதாராந் ஆசஷ்டே" என்ற கணக்கிலே 'பட்டுக் கோட்டைக்கு வழி எது?' என்றால் 'கொட்டைப்பாக்கு மூனுவீசை' என்பாரைப்போலே எதையும் எழுதிப் போதுபோக்கட்டும். (தந்தைக்கும் மகனுக்கும் ஸம்வாதம்.) தந்தை — பையா! என்ன பண்ணிக்கொண்டிருக்கிறாய்? (மகன்) இப்போதுதானப்பா ஸாப்பிட்டேன்; மணி 9 ஆய்விட்டது, இதோ பள்ளிக்கூடம் போய்க்கொண்டிருக்கிறேன். (தந்தை) ஸந்த்யாவந்தனம் பண்ணினையா? (மகன்) பின்மாலை 5 மணிக்கெழுந்து வயலுக்குப்போனேன். அங்கிருந்து வந்தபின் ப்ரைவேட் வாத்யார்வந்து பாடம்சொல்லிக் கொடுத்தார். மூன்றாவதுவீட்டில் பாம்பாட்டி வந்து அஞ்சுதலை நாகம் காட்டினான். எல்லாரும் பிடிபிடி அரிசி போட்டார்கள். (தந்தை) ஸந்தியாவந்தனம் பண்ணினையா? என்று நான் கேட்கிறேன், நீ எதையோ சொல்லுகிறாய். (மகன்) அந்த பாம்பாட்டிக்குச் சில பேர் பைசாக்களும் தந்தார்கள். நான்கூட நாலுபைசா கொடுத்தேன். (தந்தை) அதெல்லாமிருக்கட்டுண்டா; ஸந்தியாவந்தனம் பண்ணினையா என்றன்றோ நான் கேட்கிறேன். (மகன்) அந்த பாம்பாட்டிக்கு இன்று நல்ல ஸம்பாத்யம். சில வீடுகளில் வேஷ்டி உத்தரீயங்கள்கூட கொடுத்தார்கள். அந்த பாம்பு வெகு நன்றாக ஆடுகிறது. அப்பா! பள்ளிக்கூடம் போய் வருகிறேன்.

அன்பர்களே! ஜடமதியின் கதை இதுவேதான். நிந்தைகளைப் பொழிவதில் இவரை வெல்வாரில்லை யென்பதை அறியுமுலகெல்லாம். ஸம்ப்ரதாயரக்ஷணதீக்ஷை கொண்டிருப்பதாக—செவிலிமேட்டு மாந்தோப்புக் காவல்காரன் கதையாக எழுதுகிறார். அந்த தீக்ஷைக்கு விஸர்ஜனமே வேண்டாம். ஏதாவது எழுதி உலகுக்கு உபகாரம் செய்ய நினைத்தால் ஸித்தோபாய சோதநாதிகாரத்தில் கூரத்தாழ்வான் *ஸ்வஸ்தி ஸ்ரீர்திசதாத்* என்கிற ச்லோகத்தில் ஸங்க்ரஹித்த அர்த்தத்தை *தேவி! த்வந்மஹிமாவதி:* என்கிற சுலோகத்தில் விஸ்தரித்தார் என்றெழுதி யிருப்பதை விஸ்தரித்துக் காட்டி உபகரிக்கட்டும்.

—:O:—



மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபாலன் தேவஸ்தானத்தின் மானேஜிங் டிரஸ்டி சேரங்குளம் பெரியபங்களா ஸ்ரீ K. R. ராஜகோபால ஐயங்கார் ஸ்வாமியின் திருத்தாயாரின்

## திருவத்யயன இயல்கோஷ்டி.

ஸ்ரீ வானமாமலை மடம் ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீராமாநுஜ ஜீயர் ஸ்வாமி திருவடி ஸம்பந்தமுடையவளான அடியேனுடைய திருத்தாயாருமான ஸாத்வி எதிராஜம்மாள் பரிதாவிஷு ஆனிமீ 31வ வெள்ளிக்கிழமை ஆசாரியன் திருவடிகளை அடைந்தாள்.

கைங்கர்யம் பரிதாவிஷு ஆனிமீ 32ம் தேதி ஆரம்பித்து வைதீகவிதி வழுவாது நடந்து பன்னிரண்டாவது நாள் சாயந்தரம் உபயகோஷ்டிகளும் தொடங்கி பதின்மூன்றாவது நாள் இயல்கோஷ்டியுடன் உபய வேதங்களின் சாத்துமறையும் ஸ்ரீ ஜகதாசார்ய ஸிம்மாஸனாதிபதி ஸ்ரீ காஞ்சி மஹாவித்வான் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி பரமகிருபையுடன் அனுக்ரஹித்திருந்த சரமச்லோகங்களின் அர்த்தத்தை அடியேன் ஸம்பந்தி ஸ்ரீ. உ. வே. எம்பார் விஜயராகவாச்சாரியர் ஸ்வாமியும், ஸ்ரீ வானமாமலை மடம் ஆஸ்தான வித்வான் ஸ்ரீனிவாசய்யங்காரும் இன்னும் மற்றும்பலரும் விரிவாக ஸாதித்தருளி ததியாராதனவகைகள் குறைவற நடந்தேறின. வானமாமலை, கோயில் முதலான பல திவ்ய தேசங்களிலிருந்து பிரஸாதங்கள் பெற்றும் பந்துஜனமித்ரர்கள் வந்திருந்து கைங்கர்யம் செவ்வனே நடந்தேறியது.

தாஸாநு தாஸன்,

**பட்டுராஜம் என்கிற K. R. ராஜகோபாலன்.**

(அதாவது) மூலத்தில் "ஈச்வர சேஷத்வே ஸதி" என்றிருந்தால் ஈச்வரதாபர்யாப்த்யதிகரணேத்யாதியை எழுத அவகாசமுண்டு. பொதுவாக சேஷத்வே ஸதி என்றே மூலத்திலுள்ளது. "தாஸபூதாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:, நாந்யதா லக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷே ததைவ ச." என்கிற பகவச்சாஸ்த்ரவசனத்திற்குப் பிராட்டி பக்கலில் எவ்விதமான அபவாதமுமில்லை. "நாராயண சேஷத்வே ஸதி" என்றோ "மஹாவிஷ்ணு சேஷத்வே ஸதி" என்றோ மூலமிட்டிருந்தால் அப்போது (நாராயணத்வ பர்யாப்த்யதிகரணேத்யாதியை யெழுத அவகாசமிராதன்றோ. இதையெல்லாம் விமர்சித்தே வ்யாக்க்யாதா "லக்ஷ்ம்யா ஜீவாந்தர்ப்பாவபக்ஷே து ந தோஷ:" என்றார். இந்த ஜீவாந்தர்பாவ பக்ஷம் யாருடையது, என்பதைச் சிறிது ஆராயவேணும். அதை ஏற்கனவே பலகால் எழுதியிருக்கிறோம்? இங்கும் நினைவூட்டுகிறோம்.

லக்ஷ்மீ ஸஹஸ்ரத்தில் ஐச்வர்ய ஸ்தபகத்தில் (ச்லோ. 14) "ஸ்ரீமத் ராமாவரஜஸரணிம் ஸம்ச்ரிதாநாம் ஆசார்யாணும்......யஸ் தவாணுத்வவாத:" என்பது மூலம். எம்பெருமானார் தரிசனத்தைச் சேர்ந்த ஆசாரியர்களின் வாதம் என்றபடி. அவ்வாசாரியர்கள் யாவர்? என்ன, பட்டர் முதலானோர் என்று வியாக்கியானத்தில் விவரிக்கப்பட்டது. எனவே பட்டருடைய பக்ஷத்தையே மதுராந்தகம் ஸ்வாமி போல்வார் மறுக்க முன்வருகிறார்களென்று தேறிற்று. தேசிகனுக்கு பட்டர் திருவடிகளில் எப்படிப்பட்ட ப்ராவண்ய மென்பதைச் சிறிது பார்ப்போம். பட்டர் தத்வரத்நாகரமென்று ஒரு வேதாந்தநூல் பணித்திருந்தார். அது தேசிகன் காலத்தில் பிரசாரத்திலிருந்தது. (இப்போது லுப்தம்.) அதில், பூர்வமீமாம்ஸா சாஸ்த்ரத்தில் பன்னிரண்டு அத்யாயங்கள் மட்டுமே ஜைமினி செய்ததென்றும் மேல் நான்கு அத்யாயம் காசக்ருத்ஸ்நர் செய்த தென்றும் அருளிச் செய்திருப்பதாக அநுவதித்து, "ஸம்ஹிதமேதச் சாரீரகம் ஜைமினீயேந ஷோடசலக்ஷணேந" என்கிற போதாயந வாக்யத்தோடு விரோதிக்கிறதே, விரோதபரிஹாரமெப்படியென்று அதிகரண ஸாராவளியில்—"வ்ருத்திக்ரந்தே து ஜைமிந்யுபரசிததயா ஷோடசாத்யாய்யுபாத்தா ஸங்கர்ஷ: காசக்ருத்ஸ்நப்ரபவ இதி கதம் தத்வரத்நாகரோக்தி:"? என்கிற ச்லோகத்தில் பூர்வார்த்தத்தினால் சங்கித்துக் கொண்டு, (அத்ர ப்ரூம:) என்று உத்தரார்த்தம் தொடங்குகிறார். [ஸதுக்தௌ ந வயமிஹ முதா பாதிதும் கிஞ்சித் அர்ஹா:] இருவரும் ப்ராமாணிகர்கள், ஒருவர் வாக்கைத்தள்ளி மற்றொருவர் வாக்கைக்கொள்ள நமக்கதிகாரமில்லை. ஔபசாரிக நிர்வாஹம் செய்துகொள்வது என்று முடித்தார்.

"மஹர்ஷியின் வாக்கு பலிஷ்டமாகையாலே அதைக்கொண்டு பட்டர் வாக்கைத்தள்ளுகிறோம் என்றாரல்லர். "அத்ர ப்ருமோ மஹர்ஷே: பணிதிரதிபலா, தத்வரத்நாகரோக்தி: ப்ராந்த்யேத்யேவாவதார்யம்" என்று ச்லோகமிட்டிலர். ஆக இப்படி தேசிகன் திருமுடியில் வீற்றிருக்கின்ற பட்டருடைய பக்ஷத்தை மறுப்பவர்களாகத் தேறிநிற்குமிவர்கள் பகவத் ராமாநுஜதர்சன பஹிர்ப்பூதர்களென்று தள்ளத்தகுவர். ... ... ... ... ... *